4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 25-6-72 ஞாயிறு (மலர் 149

## கேரளத்தில் இதுவரை 23,179 விவசாயிகள் கைது

கொச்சி, ஜூன். 23—

கேரள விவசாயிகள் நடத்திவரும் நிலமீட்புப் போராட்டத்திலும் அநியாய வரி உயர்வை எதிர்த்து அரசு அலுவலகங்கள் முன்பு நடத்திவரும் மறியலிலும்—30-ம் நாளாகிய இன்று 1300 பேர் கைதுசெய்யப்பட்டனர்.

போராட்டம் துவங்கிய மே 25-லிருந்து இன்று வரை 23 ஆயிரத்து 179 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர் அவர்களில் பாதிப்பேர் சிறையில் ரிமாண்ட் செய்யப்பட்டுள்ளனர், அல்லது குற்றவாளிகளென தண்டிக்கப்பட்டுள்ளனர்.

## அச்சுதமேனனின் நம்பிக்கை யார் மீது?

திருவனந்தபுரம், ஜூன். 22—

கேரள முதலமைச்சர் திரு அச்சுதமேனன் மருத்துவ சிகிச்சைக்காக ஒரு மாத காலம் கிழக்கு ஜெர்மனியில் தங்கப் போகிறார்.

தனது பயணத்தைத் தொடங்கும் முன், தான் பார்த்து வந்த இலாக்காக்களில் பெரும்பான்மையானவற்றை இந்திரா காங்கிரஸ் போலீஸ் மந்திரி திருவாளர் கருணாகரனிடம் ஒப்படைத்தார். மீதியானவற்றை ஆர். எஸ். பி. மந்திரி டி. கே. திவாகரனிடமும் காங்கிரஸ் மந்திரி அடியோடியிடமும் ஒப்படைத்தார். தன்னுடைய கட்சித் தோழர்களான எம். என். கோவிந்தநாயரிடமோ அல்லது டி. வி. தாமஸிடமோ தன்னுடைய எந்த இலாகாவையும் ஒப்படைக்கவில்லை.

தன்னுடைய கட்சித் தோழர்களைவிட, காங்கிரஸ்காரர்களிடமே மேனனுக்கு அதிக நம்பிக்கையும் பற்றும் பாசமும் உண்டு என்பதற்கு இதுவும் ஒரு உதாரணம்.



மார்க்சிஸ்ட் கட்சி தலைவர்களுக்கு மதுரை ரயில் நிலையத்தில் அளிக்கப்பட்ட வரவேற்பில் தோழர் பி. ராமமூர்த்தி உரையாற்றுகிறார்.

## மார்க்சிஸ்ட் மாநாடு
# மதுரை மாநகரம் தயாராகிறது

மதுரை ஜூன். 23—

மதுரை தமுக்கம் கலையரங்கில் ஜூன் 27-ந் தேதி துவங்கும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் அகில இந்திய 9-வது மாநாட்டுக்கு தீவிரமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

இந்த மாநாட்டின் இறுதி நாளான ஜூலை 2ம் நாள் மதுரையில் மாபெரும் பேரணி நடக்கவிருக்கிறது

இந்தப் பேரணிக்கான தயாரிப்பு வேலைகளில் கட்சியின் நகர்க்குழு உறுப்பினர்களும், கட்சிக் கிளைகளும், தோழர்களும், ஆதரவாளர்களும் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

ஒவ்வொரு கட்சிக் கிளையும் மாநாட்டு நிதிக்காக நிர்ணயிக்கப்பட்ட கோட்டாவை முடிப்பதிலும் பல கிளைகள் கோட்டாவை முடித்து அதற்கு மேலும் வசூல் செய்வதிலும் இறங்கியுள்ளன.

அதே சமயத்தில் தங்கள் தங்கள் பகுதிகளில் மாநாட்டுக்கான விளம்பரங்களைச் செய்வதிலும், அலங்காரம் செய்வதிலும் தோழர்கள் தீவிரமாக ஈடுபட்டு வருகின்றனர்.

நகரின் எல்லா பகுதிகளிலும் வண்ணச் சுவரெட்டிகள் ஒட்டப்பட்டுள்ளன. தட்டிகள் எழுதி வைக்கப்பட்டுள்ளன. சுவர்களில் தலைவர்கள் படங்களுடன் கூடியசித்திரங்கள்வரையப்பட்டுள்ளன.

இரயில்வே நிலையத்திற்கு எதிரில் மத்தியதர வர்க்க ஊழியர்கள்சார்பில் கட்சித் தலைவர்களையும், பிரதிநிதித் தோழர்களையும் வரவேற்று பேனர் கட்டப்பட்டுள்ளது. நகர்க் குழு சார்பில் அலங்கார வளைவு போடப்பட்டுள்ளது.

### தியாகச் சுடருக்கு வரவேற்பு

26-ம் தேதி மாலை 5 முதல் 7 மணிக்குள் ஒவ்வொரு கிளையிலும் ஓர் இடத்தில் சிறப்பான முறையில் செங்கொடி ஏற்றி வைத்துவிட்டு பின்னர் ஊர்வலமாக சென்று, தத்தனேரி மந்தைத்திடலில் நடைபெறும், தியாகிகள் சுடர் வரவேற்பு விழாவில் கலந்து கொள்வார்கள்.

மாநாடு துவங்கும் நாளான ஜூன் 27-ம் நாள் காலையில் ஒவ்வொரு கிளையிலிருந்தும் தோழர்கள் சிறு சிறு ஊர்வலங்களாகப் புறப்பட்டு செல்லூரில் உள்ள பழைய மாநகராட்சிக் கட்டிடம் முன்னுள்ள திடலை அடைகின்றனர்.

நகரின் சுற்றுப்புறங்களில் இருந்து விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் வந்து சேருகிறார்கள்.

சிவப்புபணியன் அணிந்து ஆயிரத்துக்கும் மேற்பட்ட செந்தொண்டர்களும் பெண்களும் கலந்து கொள்கிறார்கள்.

### கொடியேற்று விழா

அங்கிருந்து —

ஆண்களும் பெண்களும் - இளைஞர்களும் பாலர்களும்- தொழிலாளர்களும் மாணவர்களும் - விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களுமாக சகலபகுதி உழைப்பாளி மக்களும் கலந்து கொள்ளும் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டு மாநாடு நடைபெறும் இடமான தமுக்கம்திடலுக்குச்சென்று —அங்கு மாநாட்டின் முதல் நிகழ்ச்சியான கொடியேற்று விழாவினை சிறப்பிக்கிறார்கள். தியாகிகள் சின்னத்திற்கு அஞ்சலி செலுத்துகிறார்கள்.

ஜூலை 2ம்நாள் மாபெரும் பேரணி நடக்கிறது. இப்பேரணியில் தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலிருந்தும், வெளி மாநிலங்களிலிருந்து நூற்றுக்கணக்கான பஸ்களும் லாரிகளும் கார்களும் வருகின்றன.

மதுரை நகரின் சுற்றுப்புறத்திலிருந்தும், மாவட்டத்தின் இதர பகுதிகளிலிருந்தும் சைக்கிள்களிலும், மாட்டுவண்டிகளிலும் விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் வந்து கலந்து கொள்கின்றனர்.

பேரணி அன்றுமாலை 3 மணிக்கு மதுரை நகரின் மேற்கு எல்லையில் உள்ள அரசரடியிலிருந்து புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகள் வழியாக ரேஸ் கோர்ஸ் திடலை அடைகிறது.

அங்கு நடைபெறும் பிரும்மாண்டமானபொதுக் கூட்டத்தில் கட்சித் தலைவர்கள் சொற்பெருக்காற்றுவார்கள்.

### போட்டி

மாநாட்டு நிதிக்காக ஒதுக்கப்பட்ட கோட்டாவை முடித்து மேலும் அதிகமாக வசூல் செய்யும் கிளைகளுக்கும். சிறப்பான முறையில் அலங்காரங்கள் செய்யும் கிளைகளுக்கும், பரிசுச் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

அந்தச் சான்றிதழில் கட்சியின் மூன்று பொலிட்பீரோ உறுப்பினர்கள் கையொப்பமிடுவார்கள்.

இந்த சோசலிசப் போட்டியில் வெற்றிபெற ஒவ்வொரு கிளைகளில் உள்ள தோழர்களும் இரவுபகலாக வேலைசெய்து வருகிறார்கள். பல தோழர்கள் விடுப்பு எடுத்தும் செயல்படுகிறார்கள்.

### மத்தியக் குழுக் கூட்டம்

மாநாட்டைஒட்டி கடந்த 21-ந்தேதி கூடி 26-ந்தேதி வரை நடைபெறும் கட்சியின் மத்தியக் குழுக்கூட்டம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

— ந. நி

## தொழில், விவசாய உற்பத்தி அதிகரிப்பில்
# சீனாவின் சாதனை
## ஐ. நா. அறிக்கை தரும் விவரம்

ஐ. நா. ஜூன். 23 —

வளர்ச்சியடைந்துவரும் நாடுகளின் 1971-ம் ஆண்டில் மொத்த உற்பத்தி 1970-ம் ஆண்டில் இருந்ததைவிட குறைந்துள்ளதுஎன்று ஐ. நா. ஸ்தாபனத்தின் பொருளாதாரஅறிக்கைகூறுகிறது.

இந்த அறிக்கையில் குறிப்பிடத் தகுந்த அம்சமாக சீனாவைப் பற்றிய அதிகாரப்பூர்வமான புள்ளிவிவரங்கள் உள்ளன. உலகில் மிகப் பெரிய ஜனத் தொகையைக் கொண்ட சீனத்தின் விவசாய உற்பத்தி விகிதமும், தொழில் உற்பத்தி விகிதமும் உயர்ந்து வருவதை அறிக்கை காட்டுகிறது.

இங்கு வெளியிடப்பட்டிருக்கும் ஐ. நா. அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது ;—

உலக ரீதியாகப் பார்க்கும்போது தொழில் உற்பத்தியில் 1971ம் ஆண்டின் சாதனை குறிப்பிடத் தகுந்ததாக இல்லை. 1971ம் ஆண்டில் இது 4 சதவிகிதமாக இருந்துள்ளது, முந்தைய ஆண்டைவிட இது கூடுதலாக இல்லை.

### தொழில் வளர்ச்சி

கடந்த டிசம்பரில் ஐ. நா. வில் சேர்ந்துள்ள சீனாவைப் பற்றி. அறிக்கையில் கண்டிப்பது குறிப்பிடத் தகுந்த அம்சமாகும் சீனாவின் மொத்த தொழில், விவசாய உற்பத்தி 1971-ம் ஆண்டில் 10சதவிகிதம் அதிகரித்துள்ளது.

சீனாவுடன் ஒப்பிடுமபோது உலக உற்பத்தி அளவு 4சதவிகிதம்தான் அதிகரித்துள்ளது. வளர்ச்சியுறும் நாடுகள் உற்பத்தி சராசரியாக 5.4 சதவிகிதம் தான் அதிகரித்துள்ளது.

3லிருந்து 4·9சதவிகிதம் வரை உற்பத்தி அதிகரிப்புள்ள நாடுகளில் ஒன்றாகவே இந்தியாவே இருக்கிறது.

மத்தியப் படுத்தப்பட்ட திட்டமிட்ட பொருளாதாரவளர்ச்சியுள்ள கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் சோவியத் யூனியனிலும் உற்பத்தி அதிகரிப்பு 6·4 சதவிகிதமாக உள்ளது,

விவசாய உற்பத்தியைப் பொறுத்தவரை இந்தியாவும் இந்தோனேஷியாவும் உற்பத்தி அதிகரிப்புப் போக்கைக் காட்டுவதாகவும் பாகிஸ்தானிலும், ஈரானிலும், இராக்கிலும் ஆப்கானிஸ்தானத்திலும் வறட்சிநிலையால் பாதிப்பு ஏற்பட்டிருப்பதாகவும் அறிக்கை கூறுகிறது.

மொத்த உற்பத்தியைப் பொறுத்தவரைஎல்லாபிராந்தியங்களிலும் ஒரே மாதிரியாக இல்லை. மேற்கு ஆசியாவில்வளர்ச்சி அதிகரித்திருக்கும் போது தெற்கு, தென் கிழக்கு ஆசியாவில் குறைந்துள்ளது. ஆப்பிரிக்காவிலும் மேற்கு மண்டல நாடுகளிலும் கிட்டத்தட்ட 1970 லிருந்த விகிதம் உள்ளது. தெற்கு, தென் கிழக்குஆசியாவில் உற்பத்தி குறைவுக்கு பெரியநாடுகளான இந்தியா, பாகிஸ்தானின் உற்பத்தி குறைவு பெரிதும் காரணமாகும்.

விவசாய சீர்திருத்தம், வேலையின்மை ஒழிப்பு, வறுமை ஒழிப்பு சீரான வருமான விநியோகம் ஆகியவற்றை பெரும்பாலான வளர்ச்சியுற்று வரும் நாடுகளின் அபிவிருத்தித் திட்டங்கள் வலியுறுத்திய போதிலும் துல்லியமான நடவடிக்கைகள் இனிமேல் தான் எடுக்கப்படவேண்டும் இந்நிலையில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் ஆரம்பக் கட்டத்திலேயே உள்ளன.

## எதிர் புரட்சியாளர்கள் ஒடுக்கப்பட்டனர்

லிமா, ஜூன். 23—

தென்அமெரிக்காவிலுள்ள பெரு நாட்டில், எதிர்ப் புரட்சி ஒடுக்கப்பட்டு விட்டது. ஜனதிபதி அல்வராடோவின் அரசாங்கம், சுதந்திரமான வளர்ச்சிக்காகவும், முற்போக்குத் திட்டங்களுக்காகவும் பாதை வகுத்து முன்னேறிச் செல்கிறது.

பெருநாடு. தென் அமெரிக்காவில் நீண்டகாலமாக அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் வேட்டைக்காடாக இருந்தது. ஆனால், 1968-ம் ஆண்டு, அக்டோபர் 3-ம் தேதியிலிருந்து, பெரு அரசாங்கம் மாறியது.

அமெரிக்க கோடீசுவரன் ராக்பெல்லருக்குச் சொந்தமான, எண்ணெய்க் கம்பெனியை நாட்டுடைமை ஆக்கியது.

நாட்டின் சகல பகுதி மக்களும், தொழிலாளர்களும் அரசாங்கத்தை ஆதரித்துத் திரண்டு எழுந்தனர்.

### சதி முறியடிக்கப் பட்டது

ஆனால் இந்த மாற்றங்களைச் சகிக்காத பிற்போக்காளர்கள் ஏகாதிபத்திய அடிவருடிகள், பெரும் பண்ணையை வைத்துக் கொண்டிருப்பவர்கள், தங்கள் சதி வேலையைத் தொடர்ந்தனர், பெரும் பத்திரிகை அதிபரான பெட்ரோ பெல்ட்ரானின் உதவியோடு, அரசாங்கத்திற்கு எதிராகப்பிரச்சாரம் செய்தனர். மீன் பிடிக்கும் தொழிலதிபர் ரோஸி என்பவர் கொலை செய்யப்பட்டதைப் பயன்படுத்தி, அரசாங்கத்திற்கு எதிராக பிரச்சாரம் செய்தனர் அரசாங்கத்தைத் தாக்கவும் சதித்திட்டம் தீட்டினர். ஆனால் இவர்களுடைய ஒவ்வொரு அசைவையும், நடவடிக்கையையும் கண்காணித்துவந்த அரசாங்கம் "எங்கள் பொறுமையின் எல்லையைத் தொட்டுவிடாதீர்கள்", என்று எச்சரிக்கை விட்டது. பொதுத் தொழிலாளர்கள் விவசாயிகள் சங்கங்கள், அரசாங்கத்திற்கு ஆதரவாகத் திரண்டு எழுந்தன.

அரசாங்கமும், தக்க சமயத்தில், நடவடிக்கை எடுத்து, சதிகாரர்களை அம்பலப்படுத்தியது. ஆனால் இந்தச் சதியின், மூலகர்த்தாக்கள், பின்னாலிருந்து செயல்பட்டனர். அவர்கள் இப்போது, அடங்கி இருக்கின்றனர்.

அரசை எதிர்த்து, நடத்தப்பட்ட சதியொன்றுமுளையிடுலயே கிள்ளி எறியப்பட்டு விட்டது. இதற்கு மத்தியில். பெரு நபடு 1963-ம் ஆண்டு அக்டோபர் 5-ம் நாள், தான் எடுத்துக் கொண்ட முடிவின்படி, சுதந்திர வளர்ச்சிக்காக முற்போக்கு நடவடிக்கைகளுக்காக தன்னைத்தயார்ப் படுத்தும் பாதையில் முன்னேறி வருகிறது.

## மதுரை மாநாட்டிற்காக
# கோவை மாவட்டத்திலிருந்து 80 பஸ், லாரிகள்

கோவை, ஜூன். 24—

இந்திய வரலாற்றிலேயே தனிச் சிறப்பிடம் பெற விருக்கும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் 9வது அகில இந்திய மாநாடு மதுரையில் ஜூன் 27ம் நாள் துவங்குகிறது.

அந்த மாநாட்டில் கலந்து கொள்வதற்காக இந்தியாவின் எல்லா பகுதிகளிலிருந்தும் வரும் பிரதிநிதிகளுக்கு வீரவரவேற்பளிக்க தமிழகம் தயாராகிவிட்டது

தமிழகத்தின் மூலைமுடுக்குகள் பட்டிதொட்டிகள், நாடு நகரங்கள் அனைத்தும் மாநாட்டிற்கான தயாரிப்புகளில் தீவிரமாக இறங்கி விட்டன.

கோவை மாவட்டத் தோழர்கள் மிக உற்சாகத்துடன் சிற்றெறும்புகள் போல் சுறுசுறுப்பாக இயங்குகின்றனர். சென்ற வாரத்தில் கோவை மாவட்டத்திலிருந்து 53 பஸ்கள் வருவதாக இருந்தது. தற்போது 80 ஆக உயர்ந்து விட்டது.

தோழர்களின் கரைபுரண்ட உற்சாகத்தினால் பஸ்கள், லாரிகளின் எண்ணிக்கை தினம், தினம் கூடிக்கொண்டே போகிறது

மதுரை மாநாட்டின் இறுதி நாளான ஜூலை 2-ம் நாள அணி வகுப்பில் கலந்துகொள்வதற்காக லாரிகளிலும், பஸ்களிலும் தோழர்கள் வருகிறார்கள்.

| | பஸ்கள் |
|---|---|
| திருப்பூர் | 16 |
| கோவை வடக்கு தாலுகா | 12 |
| சிங்காநல்லூர் | 10 |
| கோவை வடக்கு தெற்கு கமிட்டி | 9 |
| உடுமலைப்பேட்டை | 5 |
| சத்தியமங்கலம் | 4 |
| மேட்டுப்பாளையம் | 4 |
| பொள்ளாச்சி | 2 |
| ஈரோடு | 2 |
| சோலையார்—அழியார் | 2 |
| சூலூர் | 3 |
| சென்னிமலை—பெருந்துறை | 2 |
| பவானி | 1 |
| செம்மேடு | 1 |

இதுவரை கிடைத்த தகவலின்படி கோவை மாவட்டத்திலிருந்து மொத்தம் 80 பஸ்களிலும் லாரிகளிலும் வந்து மதுரை மாநாட்டில் கலந்துகொள்ள தயாராகி விட்டார்கள்.

கேரளத்தில் நிலப் போராட்டத்தில் பெண்கள் பங்கு கொள்ளும் காட்சி.

# தீக்கதிர்

## வறுமைக்குக் காரணமென்ன?

இந்தியாவின் ஜனத்தொகை கணிப்பு விபரங்கள் வெளியிடப்பட்டுள்ளன. 1961ல் 43 கோடியே 91 லட்சமாக இருந்த ஜனத்தொகை சென்ற 10 ஆண்டுகளில் வளர்ந்து இன்று 54 கோடியே 75 லட்சமாக உயர்ந்துள்ளது. அதாவது, 24-8 சதவீதம் நம் நாட்டு ஜனத்தொகையில் உயர்வு ஏற்பட்டுள்ளது.

இந்த விவரங்களை வெளியிட்ட ஜனத்தொகைக் கணிப்பு அதிகாரி திருவாளர் சந்திரசேகர் இறப்பு விகிதங்கள் குறைந்து, பிறப்பு விகிதங்கள் உயர்ந்துகொண்டே போகின்றன என்றூர். அவரது அறிவிப்பில் பிறப்பு விகிதத்தை குறைத்தால்தான் நாடு சுபிட்சம் அடையும், இதற்கான நடவடிக்கைகளை எடுக்காவிட்டால், இந்த நாட்டுக்கு பேராபத்து ஏற்படும் என்றும் அறிவிக்கிறூர்.

ஜனத்தொகைஉயர்வுதான் அவர்களதுவறுமைக்குக் காரணம் என்பது முதலாளித்துவ, பொருளாதார நிபுணர்களின் பார்வை. இது ஒரு போலித்தனமான, சொத்தையானவாதம் என்று நீண்ட நெடுங்காலத்திற்குமுன்பே சோசலிச பொருளாதார நிபுணர்கள் எடுத்துக் காட்டியுள்ளாகள். தங்களுடைய கையாலாகாதனத்தை மூடி மறைக்கவே, ஜனத்தொகைப் பெருக்கத்தைவறுமைக்குக் காரணமாக காட்டுகின்றனர்.

சோவியத் நாட்டில் புரட்சி ஏற்பட்டபோது 12 கோடி மக்கள் தான் இருந்தனர். புரட்சி ஏற்பட்டு, சென்ற 50 ஆண்டுகால வளர்ச்சிக்குப் பிறகு இன்று சோவியத் நாட்டின் ஜனத்தொகை 22 கோடி. 12 கோடி ஜனத் தொகையாய் இருந்த பொழுது அந்தநாட்டில் வறுமை, பஞ்சம், வேலைஇல்லாத் திண்டாட்டம், பட்டினி மேலோங்கி நின்றன. ஆனுல் இன்று வேலை இல்லை என்று சொல்வோரே அங்கு இல்லை. இருக்கின்ற வேலைகளுக்குப் போதிய ஆட்கள் இல்லையே என்பதுதான் அவர்களது கவலை எல்லாம்.

இந்திய நாடு விடுதலை அடைந்த சமயத்தில், ஜனநாயகப் புரட்சி நடத்தி மக்கள் ஆட்சி — கம்யூனிஸ்ட் கட்சித் தலைமையில் ஏற்பட்டது சீன நாட்டில். அங்கு அந்த சமயத்தில் சீனத்தின் ஜனத் தொகை 60 கோடி என்று அறிவிக்கப்பட்டு இருந்தது. இன்று அதே நவ சீனத்தின் ஜனத்தொகை 80 கோடியாக உயர்ந்துள்ளது.

அன்று சியாங்கே ஷேக் ஆட்சியில் சீனத்தில் வறுமை, வேலையில்லாக் கொடுமை உலகிலேயே மிகவும் பயங்கரமானதாக இருந்தன. ஆனுல் இன்று கம்யூனிஸ்ட் கட்சி தலைமையின் கீழ் சென்ற 23 ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள வளர்ச்சியில் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் என்ற பேச்சுக்கே அங்கு இடமில்லை; பஞ்சமும் பட்டினியும் அங்கு இல்லை. மாருக, அந்த நாட்டின் உற்பத்தி—தொழில், விவசாய உற்பத்தி—உலகிலேயே முதன்மையான இடத்தைப் பெற்று நாட்டில் சுபீட்சம் கொழிக்கிறது என்று ஐ. நா. வின் அறிக்கையே பறைசாற்றுகிறது.

எனவே சந்திரசேகர் கூறுவதுபோல் இந்தியநாட்டின் வறுமைக்குக்கான காரணம்ஜனத்தொகை பெருக்கமல்ல இங்குள்ள பொருளாதார அமைப்பு—சமுதாய அமைப்புதான் காரணம். தனி மனிதனின் லாபத்திற்காகத்தான் இங்கு பொருள்உற்பத்தி. டாடா, பிரிலாக்களின்வளர்ச்சிக்காகத்தான் அரசாங்கத்தின் கொள்கையும், நடைமுறையும். இந்த நிலைமைதான் நம் நாட்டின் சீரழிவுக்கும், வறுமைக்கும் காரணமே தவிர, ஜனத்தொகை பெருக்கமல்ல என்பது சோசலிச நாடுகளின் வளர்ச்சி நமக்கு எடுத்துக் கூறும்படிப்பினையாகும்.

## சோஷலிச நாடுகளின் வளர்ச்சியும் முதலாளித்துவ நாடுகளின் வீழ்ச்சியும்

1971-ஆம் ஆண்டின் உலக பொருளாதார வளர்ச்சி குறித்து ஐக்கிய நாடு சபையின் அறிக்கை ஒன்று வெளியாகியுள்ளது. இதனைப் படித்தால் இன்றைய இருவேறு சமுதாய அமைப்புகளின் வளர்ச்சியினைப் புரிந்துகொள்ளலாம்.

1970 லிருந்து 71வரை உலக நாடுகளின் பொருளாதார வளர்ச்சி பற்றிய விவரங்கள் இவை.

ஒட்டுமொத்தமாக உலகின் பொருளாதார வளர்ச்சி 4 சதவீதம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்த வளர்ச்சி சென்ற பத்தாண்டுக்கு முன்பு இருந்ததைவிட குறைவாகும். அப்போது ஐ நா. கணிப்பின்படி உலகப் பொருளாதார வளர்ச்சியின் விகிதம் 5·3 சதவீதம்.

இன்று உலகின் மூன்றில் ஒருபகுதிதான் சோஷலிச சமுதாய அமைப்புள்ள பகுதியாகும். மீதமுள்ள இரண்டு பகுதியிலும் உள்ள அமைப்புமுறை முதலாளித்துவ பொருளாதார அமைப்பு முறையாகும்.

இன்று ஐ. நா. கணக்கின்படி பொருளாதார உற்பத்தி உலகம் முழுவதுமே பத்தாண்டுகளில் 5·3 சதவீதத்திலிருந்து 4 சதவீதமாக குறைந்திருக்கிறது.

இத்துடன் ஐ. நா. வெளியிட்டுள்ள மற்றெரு வியப்புக்குரிய விபரம் சீனவைப் பற்றியதாகும்.

சென்ற ஓராண்டில் சீனத்தின் பொருள் உற்பத்தி 10சதவீதமாக உயர்ந்துள்ளது என்பதே அந்த விபரம். இது மட்டுமல்ல. சோவியத் நாடு உள்ளிட்டு சோஷலிச நாடுகளின் பொருள் உற்பத்தி 6·4 சதவீதமாக உயர்ந்துள்ளது.

இதே சமயத்தில் இந்த சோஷலிச நாடுகளின் வளர்ச்சிக் கணக்கையும், ஏனைய வளர்ச்சிபெற்ற முதலாளித்துவ நாடுகளின் பொருளாதார வளர்ச்சியையும் சேர்த்து கணக்கிட்டு சராசரி வளர்ச்சி விகிதத்தையும் ஐ நா. வெளியிட்டுள்ளது. அந்த விகிதம் 4·3 சதவீதம் தான் இந்தியாவின் வளர்ச்சியும் வெளியிடப்பட்டுள்ளது அது 4·3 சதவீதத்துக்கும் குறைவே.

ஒரு புறத்தில் சோஷலிச நாடுகளிலே 6சதவீதத்திலிருந்து 10 சதவிதம்வரை வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. மறுபுறத்திலே முதலாளித்துவ நாடுகளிலே 3 சதவீதத்திலிருந்து 4 சதவீதத்திற்கும் மேல் வளர்ச்சி உயரவில்லை.

இதிலிருந்து தெரியும் உண்மை என்ன? முதலாளித்துவ சமுதாயம் நாளுககு நாள் வளர்ச்சி குன்றி வருவதையும், சோஷலிச சமுதாயம் நாளுக்கு நாள் வளர்ச்சி அதிகரித்து வருவதையும் பார்க்கிறோம்.

காரணம் என்ன?

ஒன்றில், தனிமனிதனின் லாபத்திற்காகத்தான் பொருள் உற்பத்தி நடக்கின்றது அந்தத் தனி மனிதர்கள் என்பவர்கள் ஒருசிலரே. உழைப்பவர்களோ கோடிக் கணக்கில்! இது முதலாளித்துவ உலகம்.

மற்றதில், மக்கள் நலனுக்காகஉற்பத்தி நடைபெறுகிறது. எல்லாத் தொழிற்சாலைகளும், நிலமும் மக்களுக்கே சொந்தம், தனிப்பட்டவர்களுக்கே அல்ல. இது சோஷலிச உலகம். காரணம் இதுதான்.

### பஞ்சாலை ஒப்பந்தம்

# லேபர் கமிஷனர் விளக்கம்

## சி.ஐ.டி.யூ. சங்கங்களைக் கட்டுப்படுத்தாது

### தோழர் வி. கார்மேகம் கடிதம்

மதுரை, ஜூன். 23—

**மார்ச் 9-ம் தேதி பஞ்சாலை ஒப்பந்தத்தை முதலாளிகளுக்குச் சாதகமான முறையில் திருத்தியிருப்பதை ஆட்சேபித்து லேபர் கமிஷனருக்கு சி. ஐ. டி. யூ. தமிழகக்குழு பொருளாளரும்—ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டிருப்பவர்களில் ஒருவருமான தோழர் வி. கார்மேகம் கடிதம் எழுதியுள்ளார். தனக்கு முன்னறிவிப்புக் கொடுக்காமல் எடுக்கப்பட்டிருக்கும் இந்த நடவடிக்கைக்குத் தோழர் வி. கார்மேகம் அக்கடிதத்தில் ஆட்சேபனை தெரிவித்துள்ளார். அக்கடிதம் வருமாறு:—**

9—3—1972 அன்று சென்னையில் கையெழுத்தான மாநில பஞ்சாலை ஒப்பந்தத்தை அமுல் நடத்தாதது சம்பந்தமாக எழுந்துள்ள பிரச்னையில், 30—5—72 தேதியிட்ட உங்கள்நடவடிக்கைகுறிப்புகளை (எண் எஸ். ஐ. /42123/72) நான் பார்த்தேன். அது சம்பந்தமாகவே இதை எழுதுகிறேன்.

பேற்படி ஒப்பந்தத்தில் சில ஷரத்துக்களுக்குநீங்கள் சில விளக்கங்கள் கொடுத்திருப்பதாக, மேற்படி நடவடிக்கைக் குறிப்பில் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். தென்னிந்திய மில் முதலாளிகள சங்கமும், ஒப்பந்தத்தில் சில சங்கங்கள் சார்பில் கையெழுத்திட்டுள்ள சிலரும் இந்த விளக்கங்களை கேட்டிருந்தனர் என்றும் கூறியிருக்கிறீர்கள்.

மேற்படி ஒப்பந்தத்தில் தமிழகத்தில் உள்ள 13 பஞ்சாலை தொழிலாளர் சங்கங்களின் (சி ஐ டி யூ வுடன் இணைந்தவை) சார்பில் நானும் கையெழுத்திட்டுள்ளேன. எனவே மேற்படி சங்கங்களும் அந்த ஒப்பந்தத்துடன் சம்பந்தப்பட்ட சங்கங்களாக உள்ளன,

வி. கார்மேகம்

அவைகள் சார்பில், உங்கள் நடவடிக்கைகள் குறித்து எனக்கு எவ்வித முன்னறிவிப்பும் கொடுக்கப்படாததை நான் பலமாக ஆட்சேபிக்கிறேன். மேலும் மே மாதம் 3 4 தேதிகளிலேயே அந்தப் பிரச்னைகள் குறித்து முதலாளிகளுடனும் நீங்கள் கோவையில் வைத்துவிவாதித்திருக்கிறீர்கள். 30—5—72 அன்று உங்கள் ''விளக்கங்களை'' வெளியிடும் வரை. எங்கள் சங்கங்களுக்கு இது பற்றி எதுவும் தெரிவிக்கப்படவில்லை.

இந்தச் சூழ்நிலையில், நீங்கள் கூறியுள்ள ''விளக்கங்கள்'' ஒருதலைப்பட்சமானவை என்றும் எனவே அவை எங்கள் சி ஐ டி யூ சங்கங்களை கட்டுப்படுத்தாதென்றும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவதாக, நீங்கள் கூறியுள்ள ''விளக்கங்கள்'' தொழிலாளர்களுக்கு விரோதமாகவும் முதலாளிகளுக்கு ஆதரவாகவும் அசல் ஒப்பந்தத்தையே திருத்தியுள்ளன. இதனுலும், உங்கள் ''விளக்கங்கள்'' எங்களைக் கட்டுப்படுத்தாது.

மேலும், எங்கள் வேலை நிலைமைகளையும் வாழ்க்கையையும் பாதிக்கும் ஜீவாதாரமான பிரச்னைகளில், எங்கள் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு எவ்வித சந்தர்ப்பத்தையும் வேண்டுமென்றே கொடுக்காமல் மறுத்திருக்கும் இச்சூழ்நிலையில் உங்களுடைய ''விளக்கங்கள்'' எங்களை எவ்வகையிலும் கட்டுப்படுத்தாதென்பதை மீண்டும் வலியுறுத்திக்கூற விரும்புகிறேன்.

சவரியார்பாளைத்தில்

### மார்க்சிஸ்ட் பொதுக்கூட்டம்

திண்டிக்கல், ஜூன் 22—திண்டுக்கல் சவரியார் பாளையத்தில் தொழிற்சங்க ஆபீஸ் முன்னுல் உள்ள ஜீவாமைதானத்தில் ஜூன் 19-ந்தேதி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் சார்பில் பொதுக்கூட்டமும், பாட்டுக் கச்சேரியும் நடைபெற்றது. தோழர் ஏ. முனுசாமி தலைமை வகித்தார். தோழர் எஸ் ஏ. தங்கராஜன் இன்றைய அரசியல் பற்றியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அகில இந்திய 9 வது மாநாடு குறித்தும் பேசினுர். பொதுக்கூட்டத்திற்குப் பின்னர் மதுரை குமார் குழுவினரின் கொள்கை விளக்க இன்னிசை நிகழ்ச்சி நடந்தது. ஆயிரக்கணக்கான தோல் பதனிடும் தொழிலாளர்களும் பெண்களும் திரளாக கூடி இருந்தார்கள்.

பெண் தொழிலாளர்களும் அனுதாபிகளும் குமாருக்கு மாலைக்குப்பதில் பணம் வழங்கினுர்கள்.

### ஆசிரியருக்கு...

## சில்லரைத் தட்டுப்பாடும் கள்ளநோட்டுச் சாம்ராஜ்யமும்

ஐடா.

இந்திய நாட்டில் சமீப காலத்தில் நாட்டுக்குச் சில்லரை கிடைப்பதில் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிறது. அதற்கு பிரதான காரணம் கள்ளநோட்டு அதிகம் புழக்கத்தில் இருப்பது தான். ஆனுல் சில்லரை நாணயங்களை வேறு காரியங்களுக்கு உபயோகப்படுத்துகிறூர்கள் என்று சிலர் அபிப்பிராயம் தெரிவித்ததின் பேரில்அதிகமாக சில்லரை நாணயங்களை புதிதாக தயார் செய்ய இந்திய சர்க்கார் முற்பட்டிருககிறது. இந்த ஏற்பாடு திருடனுக்கு துணைபோகும் நடவடிக்கையே! சர்க்காரில் அடிக்கும் நோட்டுகளுக்குச் சில்லரை நாணயமும தயார் செய்து வெளியிடுகிறூர்கள். கள்ளநோட்டு அடிப்பவர்கள் சில்லரை நாணயம் தயார் செய்யவில்லை, வெறும் நோட்டுகளை மட்டும் அச்சடிதது நாட்டில் புழக்கத்தில் விடுகிறூர்கள் சுமார் 7000 கோடியிலிருந்து 15000 கோடி ரூபாய்வரை கள்ளப்பணம் நோட்டுகள் நம்நாட்டில் புழக்கத்தில் உள்ளதாக சர்க்காரேஅமைத்த வாஞ்சு கமிட்டி ஒத்துக் கொள்கிறது.

ஆனுல் அவர்களை பிடிப்பதாக பாசாங்குசெய்கிறூர்களே தவிர பிடிக்கமாட்டார்கள். காரணம் சர்க்காரின் பொறுப்பில் உள்ளவர்களுக்கும் பங்கு இருக்க வேண்டும். கள்ளப் பணம் வைத்திருப்பவர்களை கண்டுபிடிக்க முடியாதா? முடியும். அவர்கள் பகிரங்கமாகவே இருக்கிறூர்கள். நாட்டில் எல்லோருக்கும் தெரிந்த ரகசியம். திடீர், திடீர் என்று புதுப் பணக்காரர்கள் பலர் தோன்றுவதைப் பார்க்கிறோம். பங்களாவாகவும் நிலங்களாகவும், பெரும் வியாபாரமாகவும், பெரும் தொழில்களாகவும் மற்றும் பலவகையிலும் பகிரங்கமாகவே தெரிகிறது இவைகள் நாடறிந்த விஷயமாகவும் இருக்கிறது. இவர்களால்தான் விலைவாசி ஏற்றமும், வேலையில்லாத் திண்டாட்டமும், ஏழ்மையும். நாட்டில் கோடிக்கணக்கான மக்கள் சீரழிந்த வாழ்க்கை வாழ்வதும் ஏற்படுகிறது. இந்த கள்ள நோட்டுக்காரர்களையும், கொள்ளை லாபம் அடிப்பவர்களையும் கண்டுபிடித்து கள்ளத்தனமான சொத்துக்களை பறிமுதல் செய்யவோ, தண்டனை கொடுக்கவோ சர்க்காரால் முடியாதா? முடியும். ஆனுல் சர்க்காரில் உள்ளவர்களுக்கும் (மந்திரிகள் உட்பட) அதில் பங்கு இருக்கிறது என்பதால்தான் எந்த நடவடிக்கையும் எடுப்பதில்லை.

சாதாரணமானவன்தான் கஷ்டப்பட்டு வேலை செய்ய தயாராயிருந்தும் வேலை கிடைக்காமல்- வருமானம் இல்லாமல் ஏழ்மையில் தவிக்கும்போது தன்னுடைய உயிரைக் காத்துக் கொள்ள தன்னுடைய குடும்பத்தில் உள்ளவர்களின் உயிரைக்க க்க சிறு திருட்டு, சிறு குற்றம் செய்துவிட்டால் அந்த ஏழைமீது வழக்குப்போடப்பட்டு சிறையிலே தள்ளப்படுகிறுன். இப்படி தண்டிக்கப்பட்டவர்களேபெரும்பாலானவர்கள் இன்று சிறையிலே அடைக்கப்பட்டு இருப்பவர்கள். ஆனுல் பகிரங்கமாகவே கள்ள நோட்டு அடித்தும், கொள்ளை லாபம் அடித்தும் புதுப்பணக்காரர்களாக நாட்டிலே பவனி வருகிறூர்களே விஷப்பாம்புகள், அவர்கள் திருடர்கள் இல்லையா?

இன்றைய சமுதாயத்தில் இவர்களெல்லாம் பெரிய மனிதர்களாகவும் மந்திரிகளுக்கு வேண்டியவர்களாகவும், கூட்டாளிகளாகவும் காட்சியளிக்கிறூர்கள். இதுதான் இன்றையமுதலாளித்துவ ஆட்சியின்- மக்கள் விரோத ஆட்சியின் லட்சணம்.

இதுவே உண்மைநிலைமை. கள்ள மார்க்கெட்டைக் கருவறுக்கும் வரையில் சில்லரைத் தட்டுப்பாடும் மக்களது துயரமும் நீடிக்கும். இன்றைய ஆட்சியாளர்கள் இதனைச் செய்வார்களா?

இப்படிக்கு,
வி. கே. முத்துச்சாமி
மாயூரம்

### மதுரையில் பொதுக்கூட்டம்

25 6—72

மாலை 7 மணிக்கு

மேலாவணிமூல வீதியில்

(ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் அருகில்)

தோழர் பி. ராமமூர்த்தி பேசுகிறூர்.

## அமெரிக்க விமானங்களை வீழ்த்தினர்

சைகோன், ஜூன் 22—தெற்கு வியத்நாமிலுள்ள முக்கிய நகரமான ஹியூவுக்கு வடக்கே விடுதலைப்படையினர் தொடுத்த தாக்குதலில் நேற்று பல இடங்களில் அமெரிக்கரின் பாதுகாப்பு அரண்கள் தகர்ந்தன. விடுதலைப்படையினரின் 6 டாங்குகள் ஆற்றைக்கடந்து ஹியூவை நோக்கிமுன்னேறுகின்றன என்பதை அமெரிக்க ராணுவ வட்டாரம் அறிவித்தது.

விடுதலைப் படையிடமுள்ள குவாங்டிரி நகரத்தில் அமெரிக்கர்கள் விமானப்படைத் தாக்குதல் தொடுத்தனர். இதில் பங்கு கொண்ட இரு அமெரிக்க விமானங்கள் சுட்டு விழ்த்தப்பட்டன.

யுத்தக் கப்பலான ஹன்ஹாக்கிலிருந்து பறந்து வந்து தாக்கிய எப் 8 என்னும் அமெரிக்க ராணுவ விமானம் ஒன்று விடுதலைப் படையினரால் சுட்டு வீழ்த்தபபட்ளது. அதிலிருந்து தப்பிய அமெரிக்க விமானிகளை மீட்க வந்த 25 அமெரிக்க விமானங்களை தங்களது தொடர்ந்த ராக்கெட் தாக்குதலால் விடுதலை வீரர்கள் விரட்டியடித்தனர். இதில் ஏ 1 யுத்த விமானம் ஒன்றும் சுட்டு வீழ்த்தப்பட்டது.

மிகப்பெரும் அமெரிக்க ராணுவ தளமான டானுங் மீது வியத்நாம் வீரர்கள் தொடர்ந்துராக்கெட்டுகளை வீசினர். இதனுல் பலஅமெரிக்கச் சிப்பாய்களும், தென் வியட்நாம் கூலிப் படையினரும் காயமடைந்தனர்.

காண்டூம் நகரத்திற்கு 14 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள துபோ என்னும சிறு ராணுவ தளத்தை விடுதலைப்படையினர் அமெரிக்கரிடமிருந்து மீட்டனர். இதன் மூலம் காண்டூம்—பிளேக்கு நகரங்களிடையே இருந்த பிணைப்பு—மேலும் முக்கியமான ஓர் இடத்தில் துண்டிக்கப்படுகிறது.

இந்த தாக்குதலில் அமெரிக்கர்கள் இருவர் கொல்லப்பட்டதாகவும், 46 பேர் காயமடைந்ததாகவும் அமெரிக்க ராணுவ அதிகாரிகள் அறிவிக்கிறூர்கள்.

## வடவியத்நாம் மக்கள் மீது தாக்குதல்

ஹனுய், ஜூன். 22—தெற்கே விடுதலைப்படையினரிடம் அடி மேல் அடி வாங்கிவரும் அமெரிக்க வெறியர்கள் வடவியத்நாம் மீது 270 தடவை நேற்று அமெரிக்க விமானங்களை அனுப்பிகுண்டுகளை வீசினர். இதனுல் குவாங்கின் என்னும் மாகாணத் தலைநகரில் 150 பேர் இறந்தனர் நிரபராதி மக்களைக் கொலை புரியும் அமெரிக்கத் தாக்குதல்கள் நீடிக்கின்றன.

### கைதிகளை விடுவித்தனர்

சைகோன். ஜூன். 22—பல்வேறுயுத்த அரங்குகளில் கைது செய்யப்பட்ட நூற்றுக்கணக்கான தெற்கு வியத்நாம்கூலிப்படையினர் பலரை வியத்நாம் விடுதலை படையினர்நேற்றுவிடுதலைப் செய்தனர். இவர்களில், குவாங்டிரியில் மே 1ந்தேதியில் கைது செய்யப்பட்ட தெற்குவியத்நாம் கூலிப்படையினர் பலரும் அடங்குவர்.

# மலையாளிகள் எதிர்ப்பு வெறியை முறியடித்திடுக

## தோழர் ஜானகிராமன் அறிக்கை

சென்னை, ஜூன். 22—மின் தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர்து ஜானகிராமன் கீழ்வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:

கொள்கையால் வெற்றி பெறவும், தொழிலாளர்களை திரட்டவும் முடியாது தோல்வி கண்டு வரும் தி மு க. தொழிற்சங்கத் தலைவர்கள், வன்முறைச் செயலில் இறங்கியுள்ளனர். மேலும் மேலும் தாங்கள் தனிமைப்படுவதை சகிக்க முடியாமல் இனவெறியைத் தூண்ட தற்போது துவங்கியுள்ளனர். மின்வாரியத்தில் மலையாளிகள் எதிர்ப்பைக் காட்டி கலவரங்களில் ஈடுபட்டுள்ளனர்.

மலையாளிகள் எதிர்ப்பும் வன்முறைச் செயல்களும் சமீபகாலங்களில் அதிகரிக்கப்பட்டுள்ளமைக்கு கீழ்க்கண்ட சம்பவங்கள் சில உதாரணங்களாகும்.

### பரம்பிக்குளம் பகுதியில்

பரம்பிக்குளம், ஆழியாரில் இப்படிப்பட்ட சம்பவங்கள் ½ டஜனுக்கு மேல் நடைபெற்றுள்ளது நம்முடைய தோழர்கள் மீது 4 அல்லது 5 வழக்குகள் பதிவு செய்யப்பட்டு இன்றும் நடைபெற்று வருகின்றன. தாக்கிய தி மு க. சங்கத்தினர் மீது எவ்வித நடவடிக்கையும் காவல்துறையினர் எடுக்கவில்லை. நாம் போட்டுள்ள ஒரு சில வழக்குகளையும் மெத்தனப் போக்கிலே நடத்துகின்றனர்.

### கோதையாறு பகுதியில்

இதுபோல நீலகிரி மாவட்டத்தில் தி. மு. க. சங்கத்தினர் கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களையும், ரௌடிகளையும் வைத்து நமது தோழர்களை, வீடுகளில் புகுந்து தாக்கியதும் அறிந்ததாகும்.

இப்பொழுது கோதையாறில் மலையாளிகளுககு வேலை கொடுக்கக்கூடாதென்றும், மலையாளிகளை வேலை நீக்கம் செய்ய வேண்டுமென்றும் தி மு க. சங்கப் பிரதிநிதிகள் உண்ணுவிரதம் இருந்த இன விரோதப் போக்கைப் முடிந்தது. அதையடுத்து நமது தோழர்களை பயங்கர ஆயுதங்கள் கொண்டு கோதையாறிலும், நாகாகோவிலிலும் தாக்கிவருகின்றனர்.

தி மு.க. சங்கத்தினரின் இந்தச்செயல் நெல்லைத்திட்டத்தில் உள்ள சேர்வலாரிலும், மதுரைத் திட்டத்திலுள்ள பெரியார், சுருளியார் பகுதிகளிலும் விரைந்து பரவி வருகின்றன.

### சென்னையில்

சென்னையில் பேசின் பிரிட்ஜ் பவர் ஹவுசில் ஸ்ரீதரன் என்ற மலையாளத் தொழிலாளியை பலமுறை கடுமையாகத் தாக்கியுள்ளனர். பேசின்பிரிட்ஜ் கரிஅள்ளும்காண்டிராக்ட் தொழிற்சங்கத்தின் நிர்வாகிகள்வீட்டில் 13—6—72 இரவில் புகுந்து மனைவியையும் சேர்த்து அடித்து காயப்படுத்தியுள்ளனர். 16—6—72-ல் எண்ணூர் அனல் மின் திட்டத்தில் இரவு தி. மு. க. சங்கத்தவர்கள் புகுந்து மலையாளிகளைத் தாக்கி சி ஐ டி யூ வில் இணைந்துள்ள தொழிற்சங்கத்தின் கொடிக் கம்பத்தை முறித்து கொடிகளை எரிந்துள்ளனர்.

இந்தசம்பவங்கள்குறித்து சம்பந்தப்பட்ட நிர்வாகிகளுக்கும், காவல்துறை அதிகாரிகளின் கவனத்திற்கு அவ்வப்போது கொண்டு வந்தும் எவ்வித உதவிகரமான நடவடிக்கையும் இல்லை; நமது தோழர்களுக்கு பாதுகாப்பும் அளிக்கப்படுவதில்லை. தோழர் கே. ரமணி அவர்களும், சி. கோவிந்தராஜன், வி. பி சிந்தன், எம். எம். அலி ஆகியவர்களும் மத்திய அமைப்புச் செயலாளரும் பலமுறை எடுத்த நடவடிக்கைகள் செவிடன் காதில் ஊதிய சங்காக இருக்கிறது. காவல்துறையினர் நேரடியாகவே திமுக சங்கத்திற்கு உடைந்தையாக இருக்கின்றனர்.

இந்தப் போக்குகளை நாம் அனுமதிக்கமுடியாது: அனுமதிக்கக்கூடாது. சங்க வித்தியாசமின்றி சகல தொழிலாளர்களும் இதைக் கண்டித்து இயககம் நடத்திஞலன்றி தி மு. க. வன்முறைப்போக்கிற்கு முற்றுப் புள்ளி வைக்க முடியாது. எனவே, இணைக்கப்பட்ட சங்கங்கள் அனைத்தும் இது சம்பந்தமாக துண்டு அறிக்கைக் கொண்டு வந்து, தொழிலாளர்கள் கூட்டம் கூட்டி விளக்கி, தீர்மானங்கள் நிறைவேற்றி முதல் அமைச்சர் அவர்களுக்கும், மின்துறை அமைச்சருக்கும், தொழிலாளர் அமைச்சருக்கும், மின்வாரியத்தலைவருக்கும், உடனே அனுப்பி வைக்க வேண்டும். மத்திய அமைப்பிற்கும், மின் கதிருக்கும், தீக்கதிருக்கும் செய்திகள் உடனுக்குடன் அனுப்பி வைக்கவேண்டும். தட்டிகள் எழுதி அலுவலக

(4-ஆம் பக்கம் பார்க்க)

### அலுமினியத் தொழிலாளர் போராட்டம்

# சர்வகட்சி பாதுகாப்புக் கமிட்டி அறைகூவல்

மேட்டூர், ஜூன். 20—

**இங்குள்ள அலுமினியத் தொழிற்சாலையில் நிர்வாகத்தின் சட்டவிரோதமான பழிவாங்கும் போக்கை எதிர்த்து தொழிலாளர்கள் போராடுகின்றனர். கருப்பு பாட்ஜ் அணியும் இயக்கமும், உண்ணாவிரதப் போராட்டமும், வேலை நிறுத்தப் போராட்டமும் நடத்த மால்கோ தொழிலாளர் பாதுகாப்புக் கமிட்டி அறைகூவல் விடுத்துள்ளது.**

**கமிட்டியின் கூட்டம் ஜூன் 18-ம் தேதி நடைபெற்றபோது கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.**

ஜூன் 4ம்தேதிய தீர்மானத்தைத் தொடர்ந்து, 6, 10, 14 தேதிகளில் தொழிலாளர் நல அமைச்சரையும் தொழிலாளர் கமிஷனரையும் கமிட்டி சந்தித்துப் பேசியது. ஜூன் 12-ம் தேதி மத்திய உருக்கு அமைச்சர் மோகன்குமாரமங்கலத்தைச் சந்தித்துப் பேசியது.

ஜூன் 3-ம்தேதி முதல் பெண்கள் தொடர் உண்ணாவிரதம் இருந்து வருவதையும், இந்நிலையில் அடக்குமுறைகளும், மிரட்டல்களும் அதிகரித்து வருவதையும் கூட்டம் பரிசீலித்தது.

சஸ்பென்ட்செய்யப்பட்ட தொழிலாளர்களை சம்பளத்துடன் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும், வேலை நேரத்தில் மாற்றம் செய்ததை திருத்திக்கொள்ள வேண்டும், போலீஸ் நடவடிக்கைகளை ரத்துச்செய்ய வேண்டும் என்ற வேண்டுகோளை நிர்வாகம் ஏற்காததாலும் அமைச்சர் வாக்குறுதி நிறைவேற்றப்படாததாலும் உண்ணாவிரதம், வேலை நிறுத்தம் போன்ற நடவடிக்கைகளில் நிர்பந்தம் ஏற்பட்டுள்ளது.

மால்கோ தொழிற்சாலை நிர்வாகம் நடத்தும் அடக்குமுறையைத் தடுத்து நிறுத்தவும், எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கையிலிருந்து பின்வாங்கச் செய்யவும் ஸ்தல தொழிலாளர்களும் மக்களும் சேர்ந்து பரிகாரம் தேட வேண்டிய நிலைமை உருவாகியிருப்பதாக கமிட்டி கருதுகிறது.

ஆகவே மேற்படி நிலமைகளை எல்லா தொழிற்சாலை வாயில்களில் தொழிலாளர்களைக் கூட்டி 21, 22-6-72 ஆகிய தேதிகளில் விளக்கி கூறுவது எனவும் 23—6—72-ல் ஸ்தலத்தில் உள்ள எல்லா தொழிலாளர்களும் மால்கோ தொழிற்சாலை நிர்வாகத்தின்போக்கில்மாறுதல் ஏற்படாததைக் கண்டு தங்களின் கவலையை தெரிவிக்கும் வகையில் கறுப்பு அடையாளங்கள் அணிவதென்றும், இதற்குப் பின்பும் நிலைமைகள் சீர்படாவிடில் கமிட்டி கன்வீனரும் ஸ்தல சட்டமன்ற உறுப்பினருமான திரு. எம் சுரேந்திரன் எம். எல், ஏ, 24—6—72 முதல் மேற்படி பிரச்சனைகளுக்கு பரிகாரம் காணும் வரையில் உண்ணாவிரதத்தை மேற்கொள்வதென்றும், இதிலும் பரிகாரம்காணாவிடில் 26—6—72ல் ஸ்தலத்தில் உள்ள அனைத்து தொழிலாளர்களையும் கொண்ட ஊர்வலம், ஆர்ப்பாட்டம், பொதுக்கூட்டம் நடத்துவதெனவும், இதனால் நிலைமை சீர்படவில்லையானால் 29—6—72ல் ஸ்தலத்தில் உள்ள அனைத்து தொழிற்சாலைகளிலும் வேலை நிறுத்தமும் ஹர்த்தாலும் நடத்துவதுஎனவும் இக்கூட்டம் முடிவு செய்கிறது. இதனை அமுல் நடத்திவைக்க தொழிலாளர்கள் நலனில் அக்கறையுள்ள அனைவரும் கட்சி வித்தியாசங்களைப்பாராமல் தொழிலாளர்களுக்கு இழைக்கப்படும் நீதிகேடுகளைப் போக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் மேற்படி நடவடிக்கைகளில் முழு மனதுடன் ஒத்துழைத்து தொழிலாளர்களின் முன்னேற்றத்திற்கு பாடுபட முன்வர வேண்டுமென்று ஸ்தல மக்களை இக்கமிட்டி பணிவாகவேண்டிக் கொள்கிறது.

---

## சோவியத்நாட்டில் உலகின்மிகப்பெரிய அனல் மின் நிலையம்

மாஸ்கோ, ஜூன், 22—

40 லட்சம் கிலோவாட் சக்தி கொண்ட 'எகிபாஸ் அனல்மின் நிலையம்' என்ற உலகின் மிகப் பெரிய அனல் மின் நிலையத்தை வடக்குகாஸக்ஸ்தானில்கட்டும் திட்டத்திற்குசோவியத் அமைச்சரவை அங்கீகாரம் வழங்கியுள்ளது. மிகப் பெரிய நிலக்கரிப் படிவத்தின் அடிப்படையில், இந்த நிலையம் இயங்கும்.

இந்த அனல் மின்நிலையத்தைத் தவிர, மூன்று மின்விசை நிலையங்கள் எகிபாஸ்தஸ்ஸில் கட்டப்படும்.

''எகிபாஸ்தஸ் அனல் மின் நிலையத்தின் முதலாவது யூனிட், 1976இல் இயங்கத் தொடங்கும். இந்த நிலையம் மணிக்கு 2200 டன் நிலக்கரியைப் பயன்படுத்தும்.

---

## மதுரை மாநாடு நிலக்கோட்டை தயாராகிறது

நிலக்கோட்டை, ஜூன். 21—

மதுரையில் நடைபெறும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 9-வது மாநாட்டுகான தயாரிப்பு வேலைகளில் நிலக்கோட்டைத் தாலுகா தோழர்கள் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

தாலுகா முழுவதும் மாநாட்டுப் பிரச்சாரதட்டிகளும், வண்ணச்சுவரொட்டிகளும் கட்டப்பட்டுள்ளன.

### நிதி வசூல்

கடந்த 5-ந்தேதி தோழர் பி ராமமூர்த்தி இத்தாலுகாவில் சுற்றுப்பயணம் செய்தார். அவரிடம் கருப்பட்டி கிளை சார்பில் ரூ. 61-ம், சோழவந்தான் கிளை கீழநாச்சிகுளத்தில் ரூ. 81-ம பொதுப் டணித்துறையைச் சேர்ந்த டி. சி. ஆர். தொழிலாளர்கள் சார்பில் ரூ 21-ம் அளிக்கப்பட்டது.

அடுத்து 15-ந்தேதி, தோழர் என். ராமச்சந்திரனிடம் கச்சிராயிருப்புக்கிளை சார்பில் ரூ. 50-ம், 19-ந் தேதி தோழர் பாப்பா உமாநாத்திடம் மட்டப்பாறை கிளை சார்பில் ரூ 125-ம் அளிக்கப்பட்டது.

### காய் கறிகள்

மேலும் மாநாட்டுக்குத் தேவையான காய்கறிகளில் ஒரு பகுதியை வழங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

பழைய வத்தலக்குண்டு சார்பில் 1000 வாழை இலைகளும், கச்சிராயிருப்பு சார்பில 1000 வாழை இலைகளும் 100 தேங்காய்களும் மணவுடிமங்கலம் சார்பில் 2500 வாழை இலைகளும், 500 வாழைக்காய்களும், 200 தேங்காய்களும், முடுவார்பட்டி தேவசேரி சார்பில் 500 மாம்பழங்களும், 1000 முருங்கைக்காய்களும் வசூல் செய்து தருவதற்கான தீவிர ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

— ந. நி.

---

### இந்திய-சோவியத் உறவுகள்

## சோவியத் யூனியனுக்குத் தேனிரும்பை இந்தியா ஏற்றுமதி செய்யும்

கல்கத்தா. ஜூன் 23—

1972—73.ல் சோவியத் யூனியனுக்கு 5,00000 டன் தேனிரும்பை ஏற்றுமதி செய்யும் ஒப்பந்தத்தில் ''ஹிந்துஸ்தான் ஸ்டீல் லிமிடெட்'' என்ற நிறுவனம் கையெழுத்திட்டுள்ளது. இந்த ஒப்பந்தம மிக முக்கியமானது இந்தியாவின் உலோகத் தொழில் வெற்றிகரமாக வளர்ந்துள்ளது என்பதை இது காட்டுகிறது என்று இந்தியப் பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றனர். இந்திய உலோகத் துறைப் பொருள்கள் இப்பொழுது சர்வதேச சந்தைகளில் விற்கப்படுகின்றன.

1959—60 நிதி ஆண்டில் 'ஹிந்துஸ்தான் ஸ்டீல்' நிறுவனம் 28000 டன் தேனிரும்பை ஏற்றுமதி செய்தது. 1966—1967 இல் 185,000 டன் தேனிருமபை ஏற்றுமதி செய்தது 1970—1971இல் 427.000 டன் தேனிரும்பை ஏற்றுமதி செய்தது.

சோவியத் தொழில்நுட்ப உதவியுடன் கட்டப்பட்டுள்ள பிலாய் ஆலையிலும் பொக்காரோ ஆலையிலும் உற்பத்தியாகும் பொருள்கள்களும் மேற்கண்ட ஏற்றுமதியில் அடங்கும்.

---

## நகரங்களில் மக்கள் குவிகின்றனர்

புதுடெல்லி, ஜன் 22—

1971-ம் வருட ஜனத்தொகைக் கணக்கின்படி கல்கத்தா மாநகரத்தின் ஜனத்தொகை 70 லட்சத்து 32 ஆயிரம். பம்பாய்-59 லட்சத்து 71 ஆயிரம். டெல்லி 36 லட்சத்து 47 ஆயிரம். சென்னை-31 லட்சத்து 70 ஆயிரம். ஹைதராபாத்-17லட்சத்து 96 ஆயிரம். அகமதாபாத் 17 லட்சத்து 42 ஆயிரம் பங்களூர் - 16 லட்சத்து 54 ஆயிரம். கான்பூர் 12 லட்சத்து 75 ஆயிரம். பூனா 11 லட்சத்து 35 ஆயிரம், இங்கெல்லாம் ஜனத்தொகை சாமூல் அதிகரிப்பைவிட அதிகமாக இருப்பதின் காரணம் கிராமப்புறங்களில் வாழ முடியாமல் அதிகமாக மக்கள் நகரங்களில் வேலை தேடி வருவதாகும்.

---

## வியட்நாமை பாடுவீர்!

### ஆழ்கடலின் அலைமுகப்பே நீ கேளாய்!

(ச இரமணிதரன், சத்திரப்பட்டி)

எல்லையிலா கடலோரம்
வந்துசென்று விளையாடும்
தங்கநிற மீன்களே!
தாவிவரும் அலைமுகப்பே!
சிங்கம்நிகர் வியத்நாமும்
தடுமாறும் நிலைதன்னைப்
பாராய்! படையெடுப்போர்
தனைவிரட்டும் அவர்நிலையால்
மாறிவரும் இயற்கைதனை
சிறிதுகேளாய்! செவிசாயாய்!

இப்மென்றுல் குண்டுகளும்
ஏனென்றுல் நாபாமும்
இன்னபிற வெடிவைத்து
இனியநிலை சமாதானம்
அங்குசென்று பேசலாம்
என்கிருர் யார் நம்புவார்?
எங்கள்நெஞ்சம் குமுறுகின்ற
இந்தநிலை யாரறிவார்?
கடலலைகள் மலைபோன்று
குமுறுவது நானறிவேன்!

கயவனவன் எனதருமை
நாட்டினிலே விசக்குண்டு
விடுவதுவோ? அதையும்நான்
விடுபவனே? என்றுதினம்
விண்ணின்று கலகச்செய்யும்
வீணர்களை அழித்திடவே
விண்ணேக்கி எழுகின்ருய்
விரைவில்நீ வெற்றிகொள்வாய்.

---

## இந்தியாவின் ஜனத்தொகை மாநில வாரியாக

புதுடெல்லி, ஜூன் 23—

1971-ல் எடுக்கப்பட்ட ஜனக்கணிதப்படி இந்தியாவின் ஜனத்தொகை மாநில வாரியாக பின் வருமாறு;—

| | | | | |
|---|---|---|---|---|
| ஆந்திரா | — | 4 | கோடியே | 33 லட்சம் |
| அஸ்ஸாம் (மிஜோ மாநிலம் உள்ளிட்டு) | — | 1 | ,, | 49 ,, |
| பீஹார் | — | 5 | ,, | 64 ,, |
| குஜராத் | — | 2 | ,, | 67 ,, |
| அரியானு | — | 1 | ,, | 4 ,, |
| ஹிமாசல பிரதேஷ் | — | ... | ... | 35 ,, |
| ஜம்மு காஷ்மீர் | — | ... | ... | 46 ,, |
| கேரளம் | — | 2 | கோடியே | 13 லட்சம் |
| மத்திய பிரதேஷ் | — | 4 | ,, | 17 ,, |
| மகாராஷ்டிரம் | — | 5 | ,, | 4 ,, |
| மணிப்பூர் | — | ... | ... | 11 ,, |
| மேகாலயா | — | ... | ... | 10 ,, |
| மைசூர் | — | 2 | ,, | 93 ,, |
| நாகாலாந்து | — | ... | ... | 5 ,, |
| ஒரிசா | — | 2 | ,, | 19 ,, |
| பஞ்சாப் | — | 1 | ,, | 36 ,, |
| ராஜஸ்தான் | — | 2 | ,, | 58 ,, |
| தமிழ் நாடு | — | 4 | ,, | 12 ,, |
| திரிபுரா | — | ... | ,, | 16 ,, |
| உத்தர பிரதேஷ் | — | 8 | ,, | 83 ,, |
| மேற்கு வங்கம் | — | 4 | ,, | 43 ,, |

### யூனியன் பிரதேசம்

| | | | | |
|---|---|---|---|---|
| அந்தமான் நிக்கோபார் | — | 1 | லட்சத்து | 15 ஆயிரம் |
| அருணுசல பிரதேஷ் | — | 4 | ,, | 68 ,, |
| சண்டிகர் | — | 2 | ,, | 57 ,, |
| தத்ரா நாகர் ஹவேலி | — | ... | ... | 74 ,, |
| டெல்லி | — | 40 | ,, | 66 ,, |
| கோவா, டையு டாமன் | | 8 | ,, | 58 ,- |
| லட்சத் தீவுகள் | — | ... | , | 32 ,, |
| பாண்டிச்சேரி | — | 4 | ,, | 72 ,, |

— ஆக மொத்தம் ஜனத்தொகை 54 கோடியே 79 லட்சம்.

---

# லாவோசில் அமெரிக்கர் புரிந்துவரும் "சேவை"

(அமெரிக்க நிருபர் லூயிமார்ட்டின் தரும் தகவல்)

ஹனேய் ஜூன் 22—

லாவோசில் நான் தங்கியிருந்த ஓட்டல் அறைக்கு வந்து என்னை ஒருபிரிட்டிஷ் இளைஞர் சந்தித்தார். அவரது பெயர் ஜேம்ஸ்கிரின். ஒருபிரிட்டிஷ்பத்திரிகையின் நிருபராகவும் இந்தோசீனு பற்றி ஒரு புத்தகம் எழுதுவதற்காகவும் அவர் சில ஆண்டுகட்கு முன்பே லாவோசுக்கு வந்து விட்டதாகவும் கூறினர் அவரோடு பழகிய சில தினங்களில் அவர் எனக்கு **பிகாரோ** பத்திரிகையைச் சேர்ந்த இரு பிரஞ்சுப் பத்திரிகையாளர்களை அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள் எனக்கு அமெரிக்கர்கள் லாவோசில் புரிந்து வரும் கொடுமைகளில் ஒன்றை விளக்கிக் கூறினர்.

### காட்டுக் கொள்ளை

அவர்கள் கூறியதாவது; ''நாங்கள்'' ''ஆளும்'' ராணுவத்தோடு சேர்ந்து, நாஸோங்என்ற லாலோசிய கிராமத்துக்குச் சென்றேம். சிறிது நேரத்தில் ஓர் அமெரிக்க டி-28 விமானம் வானில் தென்பட்டது. இரையைத்தேடும் கழுகைப்போல் அது அந்தக் கிராமத்தின் காட்டுப்பிரதேசத்தில் வட்டமிட்டது. பிறகு விமானத்திலிருந்து குண்டுகள் வீசப்பட்டன. உடனே எங்கும் நெருப்பும் புகையுமாகச் சூழ்ந்துவிட்டது. 'ஆளும்' ராணுவத்தைச் சேர்ந்த போர் வீரர்கள் பாதுகாப்பு கிடங்குகளுக்குள் புகுவதற்குக் கூட முடியவில்லை.

''நாஸோங் கிராமத்தின் மீது தொடுத்த 'தாக்குதல்' முடிந்த பிறகு ஜெனரல் குப்ராசிட் அபாய் என்பவரோடு ஒரு போக்கு வரத்து விமானம் அங்கு வந்துஇறங்கியது.''

### ஜெனரலின் திருட்டுத்தனம்

''இந்தத் தாக்குதலுக்கும் அந்த ஜெனரலின் வருகைக்கும் என்ன சம்பந்தம்?'' என்று நான் கேட்டேன்.

சம்பந்தம் உண்டு என்று கூறிவிட்டு அவர்கள் அதனையும் என்னிடம் விளக்கினர்கள்.

''அந்த ஜெனரல் அருமையான மதிப்புமிக்க மரங்கள் உள்ள பெரிய காடுகளைத் தேடிக்கொண்டிருந்தார். அத்தகைய காடுகள் தென்பட்டால் அவற்றை 'எவருக்கும் சொந்தமில்லாத' பிரதேசமாக அறிவித்துவிட்டு, அவற்றை லாவோஸின் டிம்பர் கம்பெனிக்குச் சொந்தமாக்கி விடுவது தான் அவரது நோக்கம், ஏன் தெரியுமா? அவர் தான் அந்தக் கம்பெனிக்கும் சொந்தக்காரர். இவ்வாறு காடுகளைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ளும் சூழ்ச்சியை நியாயப்படுத்தவும் அவருக்கு வழி தெரிந்திருந்தது. அதாவது அந்தக் காடுகளைத் தமது போர் வீரர்கள் தங்கள் ரத்தத்தைச் சிந்தி கம்யூனிஸ்டு கொரில்லாப்படை வீரரிடமிருந்து கைப்பற்றியதாக அவர் சொல்லிக் கொள்ளலாம். அந்த விசித்திரமான 'தாக்குதலின்' சூட்சுமம் இதுதான்.

இவ்வாறு அந்தக் காட்டை அவர் தமக்குச் சொந்தமாக்கிய பின் அங்குள்ள தேக்கு மரங்களை மேகாங்கின் வழியாக தாய்லாந்துக்கு அனுப்பி விடுவார். அங்கு அமெரிக்க ராணுவத் தலைமையகத்தைச் சேர்ந்த இஞ்ஜினீயர்கள் ராணுவ தளங்களை நிறுவி வந்ததால், இந்த தேக்கு மரங்களுக்கு அங்கு நல்ல கிராக்கியும் தேவையும் உண்டு. இவ்வாறு அமெரிக்கர்கள் இந்த காட்டையும்கூட கொள்ளையடித்து வருகின்றனர்'' என்றும் அவர்கள் கூறினர்.

### அபினிவியாபாரம்

லாவோசில் மியோ குடியினர்தான் மிகவும் பிற்பட்டவராகக் கருதப்படுகின்றனர். அபினி உற்பத்திக்கு உதவும் கசகசாச் செடிகளைப் பயிர் செய்து வளர்ப்பதே அவர்களது முக்கியதொழில்களாகும்

அபினி வியாபாரிகள் உற்பத்தியாளர்களிடம் கிலோவுக்கு 50 டாலர் விலை கொடுத்து வாங்குகின்றனர் ஆயினும் இதே அளவு அபினி வியன்டியனில் 160 டாலருக்கும், சைகோனில் 200 டாலருக்கும், சான்பிரான்சிஸ்கோவில் 2000 டாலருக்கும் விற்கப்படுகிறது. வடக்கு லாவோஸ் காட்டுக்குள் உள்ள உறியூசாய் என்ற கிராமத்துக்கு அருகில் அபினியைப் பாடம் செய்யும் தொழிற்சாலைகள் சில உள்ளன. மேற்கூறிய ஜெனரல் குப்ராசிட்டே அண்மையில் வியன்டியனுக்கு வடக்கேயுள்ள புகோக்காஹ்யா என்ற இடத்தில் இத்தகைய தொழிற்சாலை ஒன்றை நிறுவியிருக்கிருர்.

### அபினிமலை

லாவோசிலுள்ள அமெரிக்கர்கள் போதைப் பொருள்களைக் கடத்தி வருகின்றனர் ''லாங்சாங்கில் அமெரிக்கர்கள் ஒரு டி - 28விமானத்தில் குண்டுகளை ஏற்றிக்கொண்டிருந்த அதே சமயத்தில் சிஐஏயைச் சேர்ந்த ஆயுதந்தரித்த அதிகாரிகள் சிலர் தாய்லாந்துப் போர் வீரர்களோடு சாவகாசமாக உரையாடிக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன். அதே சமயத்தில், விமானத் தளத்திலேயே விற்பனைக்காகத் தயாரிக்கப்பட்டிருந்த அபினியும் குவித்து வைக்கப்பட்டிருந்ததைக் கண்டேன்' என்று கார்ல் ஸ்ட்ரெக் என்பவர் ''ஃபார் ஈஸ்டர்ன் எகனமிக் ரெவ்யூ''வில் எழுதியுள்ளார்.

அமெரிக்கநாட்டுவிமானங்களும் ஹெலிகாப்டர்களும் லாவோசினதேசபக்தர்களை எதிர்த்துப் போராடுவதற்கு மட்டும் பயன்படுத்தப்படவில்லை. அபினியைக் கொண்டு செல்வதற்கும் பயன்படுத்தப்படுகின்றன.

வியன்டியன், சைகோன் முழுவதிலும் இந்த அபினி வியாபாரம் ஜரூராக நடக்கிறது. லாவோசிலிருந்து சைகோனுக்கு வரும் மார்க்கமும் வியன்டியன் சயனேகெட், பாக்சே முதலிய இடங்களிலிருந்து வரும் விமான மார்க்கங்களும், போதைப் பொருள்களை விற்பனைக்குக் கொண்டுவர உதவும் சிறந்த மார்கங்களாக விளங்கின. உதாரணமாக, 1967 ஆகஸ்டில் தென் வியத்நாமிலுள்ள டலாத்துக்கு அருகில் ஒரு சி-47 போக்குவரத்து விமானம் நிர்ப்பந்த வசமாக இறங்க நேரிட்டது.

### தங்கக் கடத்தல்

அதில்இரண்டரை டன் எடையுள்ள அபினியும், ஒரளவு தங்கமும் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது, அந்த விமானம் ஜெனரல் ராட்டிக்ருன்னுக்குச் சொந்தமானது. அந்தச் சரக்குகள் சைகோனிலுள்ள வியாபாரிகளுக்காக அனுப்பிவைக்கப்பட்டவை.

சைகோனில் அபினியும் பிற போதைப் பொருள்களும் ஏராளமாக விற்பனையாகின்றன. அமெரிக்க தளத்துக்குள் ரகசியமாகக் கடத்திச் செல்லப்படும் போதைப் பொருள்கள் அங்குள்ள அமெரிக்கப் போர் வீரர்களுக்கு விற்கப்படுகின்றன, இதனல் இந்தோசீனுவில் சைகோனும் வியண்டியனும் அபினி வியாபாரக்கேந்திரங்களாக மாறியுள்ளன. அமெரிக்கப் போர் வீரர்களின் பகிரங்கமான ஆதரவோடு இந்த வியாபாரம் மும்முரமாக நடைபெற்று வருகிறது.

### ஐ. வி. எஸ்.சின் சேவை

தென்வியட்நாம் எல்லையை ஒட்டிய குன்றுகளிலும் காடுகளிலும் ஜேம்ஸ் கிரின் எனக்குச் சில அமெரிக்கர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். அவர்கள் அனைவரும் 25 முதல் 30 வயதுக்கு உட்பட்டவர்களே.

''நீங்களும் ஐ வி எஸ் சைச் சேர்ந்தவர்களதானு?' என்று அவர்களில் ஒருவர் என்னிடம் கேட்டார்,

''ஐ. வி. எஸ்.சா? என்ன அது?'' என்று கேட்டேன் நான்.

ஜிம் வெல்லர் என்ற அமெரிக்கர் அதனை எனக்கு விளக்கினர். ஐ வி எஸ் என்ருல் இண்டர் நேஷனல் வாலண்டரி சர்வீஸ் என்று அர்த்தம்.

தேவாலயங்களைப் புனரமைப்பதற்கான சமய இயக்கம் ஒன்றின் பேரில் இது இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் அமெரிக்காவில் தொடங்கப்பட்டது. சில ஆண்டுகட்குப் பின்னர், இந்த ஸ்தாபனத்தின் நோக்கம் மாறிவிட்டது. ஐ. வி எஸ். அதிகாரிகள்பலர் வளரும் நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர்.

-'ஐ. வி. எஸ்ஸும், சி. ஐ ஏ.யைச் சேர்ந்த சமாதானத் தொண்டர் படையும் ஒன்றுதான் என்று கருதிவிடாதீர்கள்'' என்று எச்சரித்தார் அந்த அமெரிக்கர். ''சமாதானப்படை ஒரு சர்க்கார் ஸ்தாபனம்; ஐ. வி எஸ். தனிப்பட்ட ஸ்தாபனம், பல தரும ஸ்தாபனங்கள் வழங்கும் நிதி உதவியினுல்தான் ஐ. வி. எஸ், நடைபெற்று வருகிறது.''

இந்த தரும ஸ்தாபனங்களைப் பற்றிய உண்மைகளை லாவோஸ் நாட்டுத் தேசபக்தர்கள் எங்களிடம் அம்பலப்படுத்தினர். அமெரிக்க ராஜாங்க இலாகா, அமெரிக்க ராணுவத் தலைமையகம் யுஎஸ்எய்டு ஆகியவைதான் அந்த 'தரும ஸ்தாபனங்கள்' லாவோஸிலும் தென்வியத்நாமிலும் ஐ.வி. எஸ்,ஸைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் அமெரிக்கத்தூதரகமும் யு எஸ் எய்டு ஸ்தாபனமும் தான் வழிகாட்டு வருகின்றன, ஆணையிட்டு வருகின்றன. இப்போது ஐ வி எஸ் ஸைச் சேர்ந்த சுமார் 90 அதிகாரிகள் அந்நட்டின் பல பகுதிகளிலும் 'பணி'யாற்றிவருகின்றனர். அவர்கள் பொதுவாக, தம்மை விவசாய நிபுணர்கள், நீர்ப்பாசன நிபுணர்கள் என்றுதான் கூறிக்கொள்கின்றனர். உண்மையில் அவர்கள் உளவு வேலையில்தான் ஈடுபட்டுள்ளனர். முக்கியமாக, லாவோஸ் தேசபக்த முன்னணியின் படைகள் எங்கெங்கே இருக்கின்றனவோ அங்குதான் அவர்களது கவனம் பெரிதும் செல்கிறது இந்த ஐ. வி. எஸ். அதிகாரிகள் தமக்குத் தேவையான ஏஜெண்டுகளையும் பொறுக்கி எடுக்கின்றனர். அந்த ஏஜெண்டுகளில் ஒருவர் இவ்வாறு கூறினர்.

''ஐ வி எஸ். அதிகாரிகள் எனக்கு நான் பார்க்க வேண்டியவேலையின் சிரமங்களையெல்லாம் எடுத்துரைத்தனர். நான் சில மாதம் வியத்நாமிய மொழியைப் பயில வேண்டியிருந்தது. நாட்டு மக்களோடு எளிதில் கலந்து பழகவும், எல்லைப்புற கிராமம் ஒன்றில் குடியேறி, அங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொள்ளவும் வேண்டும் என்று கூறினர். 'உணவு. உடை, பொழுது போக்கு எல்லா விஷயத்திலும் நீ உள்நாட்டு மக்களைப் போலவே நடந்து கொள்ள வேண்டும். உனக்கு என்ன நேர்ந்தாலும் நீ அங்கேயே இருக்க வேண்டும். எல்லாச் சந்தர்ப்பங்களிலும் வியத்காங் படைகள், பாதட்லாவோ படைகள் ஆகியவற்றின் செல்வாக்கைக் குறைப்பது தான், உன் வேலை. உன் வேலை முடிந்து அமெரிக்காவுக்குத் திரும்பியதும் நீ நல்ல விதத்தில் கௌரவிக்கப்படுவாய்' என்று என்

(4-ஆம் பக்கம் பார்க்க)

# அமெரிக்கத் தேர்தல் வேட்பாளர் யார்? வெற்றி வாய்ப்புகள்

[ஒரு கண்ணோட்டம்]

அமெரிக்காவில் ஜனாதிபதித் தேர்தலுக்குக் கட்சியின் வேட்பாளராக போட்டியிடும் ஜனநாயகக் கட்சி செனட்டரான ஜார்ஜ் மக்கவர்னை ஆதரிக்கும் இளைஞர் கூட்டம் "நாங்கள் நாமிநேஷனைப் பெற்றுவிடுவோம். அதுவும் வெகு விரைவில் பெற்றுவிடுவோம்" என்று கூறி வருகின்றனர்.

## தேர்தல் நடப்பது எவ்வாறு ?

ஜூலை மாதத்தில் மியாமி பீச்சில் நடைபெறவிருக்கும் மாநாட்டில் ஜனநாயகக் கட்சி தனது வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்த மாநாட்டுக்குரிய பிரதிநிதிகள் பிரைமரித் தேர்தல்களின்மூலம் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இந்தத் தேர்தல்கள் அமெரிக்காவின் பல்வேறு மாநிலங்களிலும் இப்போது நடைபெற்று வருகின்றன. இந்தப் பிரதிநிதிகள் தேர்தல்களில், தமக்கு ஆதரவான பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவதற்காக, நான்குக்கு மேற்பட்ட வேட்பாளர்கள் முயன்று வருகின்றனர். தமக்கு ஆதரவாகப் பெரும்பான்மையான பிரதிநிதிகளைத் திரட்டக்கூடிய வேட்பாளரே, ஜனாதிபதித்தேர்தலுக்கான கட்சியின் வேட்பாளராகப் பொதுவாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்.

## வேட்பாளர்கள் யார், யார்?

இம்முறை ஜனநாயகக் கட்சியின் நாமிநேஷனைப் பெற முயலும் முக்கிய வேட்பாளர்கள் செனட்டர் ஜார்ஜ் மக்கவர்ன், செனட்டர் ஹூபர்ட் ஹம்ப்ரி, செனட்டர் எட்மண்ட்மஸ்கி, கவர்னர் ஜார்ஜ் வாலஸ் ஆகியோராவர். இவர்களில் தேர்தல் இயக்கத்தின்போது ஜார்ஜ் வாலஸை ஒருவர் துப்பாக்கியால் சுட்டுவிட்டதால், அவர் முடமாகி ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். மியாமியில் நடைபெறும் மாநாட்டில் அவர் தள்ளுவண்டியில் வந்தேனும் கலந்துகொள்ள இயலுமா என்பது சந்தேகம்தான்.

தேர்தல் இயக்கம் தொடங்கிய சமயத்தில் இந்த நால்வரில் செனட்டர் எட்மண்டு மஸ்கி தான் மிகுந்த நம்பிக்கையோடு இருந்தார் என்றும் அவருக்குப் போதிய நிதிவசதி இல்லாததால், அவர் இடையிலேயே நிற்க வேண்டி வந்துவிட்டது. அமெரிக்க ஜனாதிபதித் தேர்தல்களுக்கு கொள்ளைப் பணம்செலவாகும். பெரிய பணக்காரர்கள் அல்லது பெரும் பணக்காரர்களின் ஆதரவைப் பெற்றவர்களே தேர்தலில் திறம்படப் போட்டியிட முடியும். சில வேட்பாளர்கள் தம்மை மிகவும் முற்போக்காளராகக் கூறிக் கொள்ளலாம். வேறு சிலர் தம்மை ஒரு பெரிய 'தீவிரவாதி' என்றுகூடக் கூறிக் கொள்ளலாம். ஆயினும் அவரை ஆதரிக்கும் செல்வந்தர் அவருக்காக பணத்தை செலவிட முன்வரா விட்டால், அவரால் தேர்தலில் போட்டியிட முடியாது. ஜனாதிபதி தேர்தலில் மட்டுமல்ல, கட்சியின் நாமிநேஷனைப் பெற நடக்கும் போட்டியிலும்கூட இதே கதைதான். தம்மை ஆதரிக்கக்கூடிய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு பிரைமரித் தேர்தல் வாக்காளர்களை (அதாவது கட்சி அங்கத்தினர்களை) தூண்டுவதற்கும்கூட, வேட்பாளர்கள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு ஏராளமான பணத்தைச் செலவிட வேண்டியுள்ளது.

## முக்கிய போட்டியாளர்கள்

எட்மண்ட் மஸ்கியிடமோ பண வசதி இல்லாது போய்விட்டது; கவர்னர் வாலஸோ ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். எனவே இப்போது தேர்தல் களத்தில் பிரதானமாகப் போட்டியிடுபவர்கள் ஜார்ஜ் மக்கவர்னும் ஹூபர்ட் ஹம்ப்ரியும்தான். இவர்களில் மக்கவர்ன் தமக்கு ஆதரவாக அணி திரட்டுவதில் வல்லவர்; பணம் திரட்டுவதிலும் வல்லவர். மேலும் இவர் இளைஞர்களைத் தம்பால் கவர்ந்து இழுத்ததோடு மட்டுமின்றி, அவர்களைத் தமக்காக உற்சாகத்தோடு உழைக்கவும் செய்துவிட்டார். ஹூபர்ட் ஹம்ப்ரி அமெரிக்காவின் முன்னாள் உப ஜனாதிபதிகளில் ஒருவர். சென்ற ஜனாதிபதித் தேர்தலில் நிக்சனுக்கு இவரே பிரதான எதிராளியாக இருந்தார். கட்சி ஸ்தாபனமும், தொழிலாளர் தலைவர்கள் உள்ளிட்ட பழைய தலைவர்களும் இவரையே ஆதரிப்பதாக அமெரிக்கப் பத்திரிகைகள் கூறுகின்றன.

ஆயினும் இதுவரை நடந்துள்ள போட்டியில் மக்கவர்னே வெற்றிமுகம் நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார். கட்சியின் நாமிநேசனை நேர்முகமாகப் பெறுமளவுக்கு இவர் பிரதிநிதிகளின் பூரணப் பெரும்பான்மை பலத்தை இன்னும் பெற்றுவிட வில்லை என்பது உண்மையே. ஆயினும் ஏராளமான பிரதிநிதிகளின் ஆதரவைப் பெற்ற வேட்பாளராக இவரே விளங்குகிறார். போட்டியிலிருந்து விலக நேர்ந்துவிட்ட எட்மண்ட் மஸ்கி அல்லது ஜார்ஜ் வாலஸ் போன்றவர்களில் எவரேனும், முந்தி நடந்த பிரைமரித் தேர்தல்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட தமக்கு ஆதரவான பிரதிநிதிகளின் ஆதரவோடு, மக்கவர்னை ஆதரிக்க முற்பட்டால் மக்கவர்ன் மிகச் சுலபமாக வெற்றி பெற்றுவிடுவார் என்பது நிச்சயம். இல்லாவிட்டால், அவரது ஆதரவாளர்களாக இல்லாத பிரதிநிதிகளின் வாக்குகளை அடுத்தவர் விலைக்கு வாங்க முயல்வார் அத்தகைய விலைக்கு வாங்கும்போட்டியையும் அவர் எதிர்நோக்க நேர்ந்துவிடும். அவ்வாறு நேர்ந்தாலும்கூட, அதற்கான வசதிகளைத் திரட்டக்கூடிய சாமர்த்தியம் மக்கவர்னுக்கு உண்டு. எனவே, எதிர்பாராத விதத்தில் ஏதேனும் நடந்தாலன்றி, மக்கவர்ன் போதிய வாக்குகளைப் பெற்று வெற்றிபெறக்கூடிய வாய்ப்பு இருக்கத்தான் செய்கிறது.

## ஜனாதிபதித் தேர்தல்

எனினும், கட்சியின் நாமிநேஷனைப் பெறுவது என்பது வேறு; ஜனாதிபதித் தேர்தலில் வெற்றி பெறுவது என்பது வேறு.

ஜனநாயகக் கட்சியின் நாமிநேஷனைப் பெறுவதில் மக்கவர்ன் வெற்றிபெற்றால், அவர் குடியரசுக் கட்சியின் வேட்பாளராக நிறுத்தப்படும் நிக்ஸனைஎதிர்த்துப்போட்டியிடுவார். நிக்ஸன்தான் இன்றைய அமெரிக்க ஜனாதிபதி. பேலும் மக்கவர்னைக் காட்டிலும் அதிகமான நிதிவசதிகளைத் திரட்டவும் நிக்சனால் முடியும். இப்போதைய நிலவரப்படி மக்கவர்னைக்காட்டிலும் நிக்ஸனே முன்னணியில் நிற்கிறார் என்றும் வாக்காளர்களின் ஆதரவு நிக்சனுக்கும் மக்கவர்னுக்குமிடையே 43 : 30 என்ற விகிதத்தில்தான் இருந்து வருகிறது என்றும் கூறப்படுகிறது. ஆயினும் இத்தகைய ஹேஸ்யங்களின்படியே முடிவும் இருக்கும் என்பதில்லை. தேர்தல் தேதி நெருங்க நெருங்க, நிலைமை தலைகீழாக மாறவும்கூடும்.

## திட்டம் உண்டா?

திட்டத்தைப் பொறுத்தவரையில் ஒன்றுக்கொன்று அத்தனை வேற்றுமை எதுவும் இல்லாத (குடியரசுக்கட்சி, ஜனநாயகக்கட்சி ஆகிய) இரு முக்கியமானபோட்டிக் கட்சிகளைக்கொண்ட ஒரு நாட்டில்—தேர்தல்களத்தில் ஒருவருக்கொருவர் மோதிக்கொள்ளும் நபர்களின் நபர் மதிப்புக்குத்தான் மிகுந்த முக்கியத்துவம் உண்டு. ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்கள்தான் அங்கு தத்தம் கட்சியின் திட்டம் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையே நிர்ணயிக்கிறார்கள்.

இம்முறை ஜனாதிபதித்தேர்தலில் போட்டியிடவிருக்கும் குடியரசுக்கட்சி வேட்பாளரையும், ஜனநாயகக் கட்சி வேட்பாளரையும் நோக்கும்போது—இருவருக்கிடையிலும் வித்தியாசம் ஏதும் இல்லை என்று சொல்லிட முடியாது. உதாரணமாக செனட்டர் மக்கவர்ன் சாதாரண அமெரிக்க மக்களின் அபிலாஷைகளைக் கிட்டத்தட்ட பிரதிபலிக்கக்கூடிய திட்டத்தைக்கூறி, தமது நாமிநேஷனைப் பெறுவதற்காகப் பாடுபட்டு வருகிறார். வியத்நாம் யுத்தத்தை உடனடியாக நிறுத்தவேண்டும் என்றும், இந்தோ-சீனாவிலிருந்து அமெரிக்கா பூரணமாக விடுபட வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். அதேபோல் அமெரிக்காவின் பாதுகாப்புச் செலவையும் கணிசமான அளவுக்குக் குறைக்க வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். அவரது திட்டப்படி, கம்பெனிகளுக்குள்ள வரிகளும், பிதிரார்ஜிதச் சொத்து வரிகளும் உயர்த்தப்படும். பணக்காரர்களிடமிருந்து பணத்தைப் பெற்று அதனை ஏழைகளுக்குப் புனர்வினியோகம் செய்யவேண்டும் என்றும் இவர் கூறுகிறார். ஒவ்வொரு ஆண்-பெண் குழந்தைக்கும் ஆண்டுதோறும் ஆயிரம் டாலர் கொடுக்கவேண்டும் என்பது இவரது கருத்து. வருடத்துக்குப் பன்னிரண்டாயிரம் டாலரோ அதற்கு மேலோ வருமானமுள்ள குடும்பங்கள் இந்தத் தொகையைக் கொடுத்துவிடவேண்டும் என்பதோடு மட்டுமல்லாது, தமது வருமானத்தில் ஒரு பகுதியையும் வரியாகச் செலுத்திவிட வேண்டும் என்பது அவர் திட்டம்.

## மக்கவர்னின் "சோஷலிசம்"

ஆயினும் அவரது திட்டத்தில் கடைசியாகக் கூறப்பட்டுள்ள யோசனையை அவரது எதிராளிகள் மட்டுமல்லாது, பொதுவாக அமெரிக்கப் பத்திரிகைகளும் நையாண்டி செய்து வருகின்றன. இதன் விளைவாக, மக்கவர்ன் தாம் கூறியவற்றையே இப்போது கைவிட நேர்ந்துள்ளது என்று அமெரிக்கப் பத்திரிகையாளர்கள் கூறியுள்ளனர் இதுகாரிய சாத்தியமற்ற திட்டம் என்று அவர்கள் கூறுகின்றனர். அவர்கள் கூறுவதை மக்கவர்னும் இப்போது ஒத்துக் கொள்வதுபோல் தோன்றுகிறது. அதே சமயத்தில், மக்கவர்னின் திட்டம் இந்த அம்சத்தில் நிக்சனின் குடும்ப உதவித் திட்டத்தையே பெரிதும் ஒத்திருப்பதாகவும் அமெரிக்கப் பத்திரிகைகள் கூறியுள்ளன.

பாதுகாப்புச் செலவுகளைக் குறைப்பது, கம்பெனி வரிகளையும், பிதிரார்ஜிதச் சொத்து வரிகளையும் அதிகரிப்பது முதலிய கருத்துக்கள் ஒரு "தீவிரவாதி" என்ற பெயரை மக்கவர்னுக்குத் தேடித் தந்துள்ளன. முதலாளிகள் இல்லாத முதலாளித்துவ அமைப்பை மக்கவர்ன் அமெரிக்காவில் உருவாக்குவார் என்ற அமெரிக்க அரசியல் விமர்சகர் ஒருவர் கூறியுள்ளார். இன்னொருவரோ அவர் சோஷலிசத்தையே கொண்டு வந்து விடுவார் என்றுகூடக் கூறியுள்ளார்.

இத்தகைய விமர்சனங்கள் மக்கவர்னுக்கு உண்மையில் அச்சத்தையே ஊட்டியுள்ளன. எனவே அவர் வால் ஸ்ட்ரீட் ஜர்னல் பத்திரிக்கையில் 21 ஆயிரம் டாலர் செலவிட்டு, ஒரு கடித வடிவில் ஒரு முழுப் பக்க விளம்பரத்தையே வெளியிட்டு விட்டார். தாம் வரிவிதிப்புப் பற்றித் தெரிவித்துள்ள கருத்துக்கள் யாவும் காங்கிரசின் பரிசீலனைக்காகக் கூறப்படும் யோசனைகளேயாகும் என்று அவர் அந்த விளம்பரத்தில் கூறியுள்ளார், அவரை ஒரு சோஷலிஸ்ட் என்று குற்றம் சாட்டியதற்கும் அவர் கீழ்வருமாறுபதில் கூறியுள்ளார்: "கார்ப்பரேஷன்கள் மற்றும் பிற தொழில் ஸ்தாபனங்களின் தலைமையில் தனியார் துறை ஜீவசக்தியோடு வளர்ச்சியுற்றிருப்பதே அமெரிக்கப் பொருளாதாரத்தின் வலிமைக்குப் பிரதானமான காரணமாகும். எனவே தொழில் ஸ்தாபனங்கள் பயன்மிக்க விதத்தில் செயல்படுவதற்கான நிலைமைகளை உருவாக்குவது நல்லதொரு பொதுக் கொள்கையாகும்." இதுதான் மக்கவர்னின் சோஷலிசம்

உண்மையில் மக்கவர்ன் தமது தேர்தல் வாக்குறுதிகளைப் பற்றி 'விளக்கம்' கூற வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்கும் வேட்பாளர்களின் வாக்குறுதிகளை நம்ப வேண்டியதில்லை என்பதை அனுபவம் அமெரிக்க மக்களுக்கு கற்றுக் கொடுத்துள்ளது. வேட்பாளர்கள் தமது வாக்குறுதிகளை உண்மையிலேயே நிறைவேற்றி இருந்தால், எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பே உலகம் எவ்வளவோ நல்லபடியாக மாறி இருக்கும். ஆனால் அவர்கள் அவ்வாறு நிறைவேற்றுவதில்லை. உதாரணமாக, லிண்டன் ஜான்சன் ஜனாதிபதி தேர்தலுக்கு நின்ற காலத்தில் வியட்நாம் போருக்கு முடிவு கட்டுவதாக வாக்களித்தார். ஆனால் ஜனாதிபதியாக வந்தவுடனே அந்தப் போரை விஸ்தரிக்கவே செய்தார். நிக்சனும் இது போலவே நடந்து கொண்டார்.

இப்போது மக்கவர்ன் அமெரிக்க மக்கள் தம்மை நம்பவேண்டும் என்று விரும்புகிறார். ஆனால் அமெரிக்க மக்கள் அவரை நம்புவார்களா? பார்ப்போம். அவர்கள் வாக்களிக்கலாம். நிக்ஸனுக்கோ மக்கவர்னுக்கோ வாக்களிக்கலாம். அதேசமயத்தில், வெள்ளை மாளிகையில் யார் ஜனாதிபதியாக வந்து வீற்றிருக்க நேர்ந்தாலும், அமெரிக்க நாட்டில் வலிமை மிக்கதாகவுள்ள ராணுவ-தொழில்துறை ஆட்சிக் கும்பலின் நிர்ப்பந்தத்துக்கு அவர் ஆளாக நேரிடும் என்பதை அவர்கள் நன்கறிவர்.

வியத்நாம் யுத்தத்திற்கு ஒரு முடிவுகாண வேண்டும் என்ற அமெரிக்க மக்களின் சமாதான ஆர்வத்தினை பயன்படுத்திக்கொண்டு வெற்றியடைய மெக்கவான் பெரு முயற்சி செய்கிறார். அதனால்தான் வாலிபர்களும் ஏனையோரும் அவருக்குப் பின்னால் ஏராளமாகத் திரளுகிறார்கள்.

ஆனால் இவ்வாறு வெள்ளை மாளிகையில் உட்காரப் போகும் எந்த ஒரு நபரையும் நம்பினால் தங்களது அபிலாசைகள் நிறைவேறமாட்டா, தங்களது சொந்தப் போராட்டங்கள் மூலமே அதைச் சாதிக்க முடியும் என்பதை அமெரிக்க மக்கள் மீண்டும் ஒருமுறை கற்றுக்கொள்வார்கள்

—அரசியல் விமர்சகன்.

## மலையாளிகள்...

(2-ஆம்பக்கத் தொடர்ச்சி)

வாசல்கள் முன்னால் வைக்க வேண்டும்.

குறிப்பு:—

1) தினக்கூலி தொழிலாளர்களுக்கு ஆண்டு உயர்வு என்பது கொடுக்க வேண்டுமென நாம் போராடி வருவதையொட்டியும் பல முறை மின் வாரியத் தலைவரை பேட்டி கண்டு வற்புறுத்திவருவதையொட்டியும், அடுத்த போர்டு கூட்டத்தில் இது பற்றி முடிவு செய்யப்படும் என்று 20—6—72-ல் தெரிவித்துள்ளனர். என்றாலும் ஆண்டு உயர்வு 50 காசு கோரி மின் வாரிய சேர்மனுக்கு ஒவ்வொரு இணைக்கப்பட்ட சங்கங்களும் தந்தி கொடுக்கவேண்டும்.

2] 1—10—71 முதற் கொண்டு வைத்துள்ள டிசிஆர்களைநிறுத்தசி.எஸ்.ஆர். தெரிவித்துள்ள டிஓ கடிதத்தின் அடிப்படையில் 21—6—72-ல் மின் வாரிய தலைவரைக் கண்டு கடிதம் கொடுத்துள்ளது.

3) கோதையாறுக்குஒதுக்கப்பட்ட இடத்திற்கான தனி அலவன்ஸ் வருகின்ற போர்டு கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டு கொடுக்கப் படவிருக்கிறது.

# "பாவிகளுக்கு" நாக்கு ஒன்று- இரண்டா?

சென்னை, ஜூன். 21—

தமிழக முதலமைச்சர் கருணாநிதி நிருபர்களுக்கு இன்று அளித்த பேட்டி ஒன்றில் கூறினார்;

"டெல்லியில் நடந்த தேசியவளர்ச்சிச் குழுக் கூட்டத்தில் கூட, திட்டக்குழுவின் சார்பில் கருத்து அறிவித்தபோது, கரும்புக்கு ஏக்கருக்கு 250 ரூபாய் வரி போட வேண்டும் என்று அறிவுறுத்தினர். சில மாநிலங்களில் விவசாயிகளுக்குப் போடப்பட்டிருந்த வரியை திரும்ப விதிக்க வேண்டும் என்று அறிவுறுத்தினர்.

'பொதுவாகவே, விவசாயிகளுக்கு வரி குறைவாக இருக்கிறதென்றும், இனிமேல் அந்த முனையில் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்றும், திட்டக்குழு கருத்துத் தெரிவித்தது."

தேசிய வளர்ச்சிக்குழுக் கூட்டத்தில் மாநில முதலமைச்சர்கள்கலந்துகொண்டனர். அப்போது, இந்திரா காங்கிரஸ், வலதுகம்யூனிஸ்ட், முதலமைச்சர்கள் "ஆமாம் சாமி" போட்டு விட்டு,

இன்று ஏழை எளிய விவசாயிகளுக்காக கண்ணீர் வடிக்கின்றனர்.

"பாவிகளே!" உங்களுக்கு

நாக்கு ஒன்று— இரண்டா?

# குமரி தோட்டத்தொழிலாளர் வேலைநிறுத்தம் வெற்றி

நாகர்கோவில், ஜூன். 24 -

கடந்த மூன்று மாதங்களுக்கும் மேலாக நடந்துவரும் குமரி மாவட்ட அரசு ரப்பர் தோட்டத் தொழிலாளர் வேலைநிறுத்தப் போராட்டத்தில் உடன்பாடு ஏற்பட்டதால் வேலை நிறுத்தம் நிறுத்தி வைக்கப்பட்டது.

இத் தோட்டத்தில் 1500 தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர். தொழிலாளர் அனைவரும் வேலைக்குத் திரும்பினர். ஒப்பந்த விபரம் பின்னர் அறிவிக்கப்படும்.

## நடக்கஇருப்பவை

### நாடகம்

2—7—72-ல்

9-வது மாநாட்டின் பொதுக்கூட்டம் முடிந்த பின்

தமுக்கம் மைதானத்தில்

பீப்பிள்ஸ் தியேட்டர்ஸார் அளிக்கும்

'நெஞ்சில்ஒருகனல்'

நாடகம் நடைபெறும்.

நன்கொடை: ரூ 0—50பை

ஃ ஃ ஃ

### தையற் தொழிலாளர் மாநாடு

மதுரைவிக்டோரியா எட்வர்ட் ஹாலில்

நாள் : ஜூன் 25, 26 தேதிகளில் நடைபெறும்.

தலைவர் :

எம். எஸ். விஜயநாத்

கலந்து கொள்வோர் :

அமைச்சர் ஓ. பி. ராமன்

சக்திமோகன் எம். எல். சி.

கே. வாசுதேவன் (சி. ஐ. டி. யூ.)

மற்றும் பலர்.

மதுரை. இராமநாதபுரம் — நெல்லை — மாவட்டங்களிலிருந்துபிரதிநிதிகள் வருவர்.

ஃ ஃ ஃ

### கீழவெண்மணி தியாகிகள் சுடர் வரவேற்பு பொதுக்கூட்டம்

நிலக்கோட்டை வட்டம் வாடிப்பட்டியில்

25—6—72

மாலை 6 மணிக்கு

சி. நீலமேகம் தலைமையில்

என். வரதராஜன்

என். ராமச்சந்திரன்

பேசுவார்கள்.

## லாவோசில்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

னிடம் கூறினர்."

இப்போது தென் வியத்நாமில் ஐ. வி. எஸ் அதிகாரிகள் நூற்றுக்குமேல் உள்ளனர். 88 பேர் லாவோஸில் உள்ளனர்: இவர்களில் 34 பேர் "ஆசிரியர்"களாகவும், 54 பேர் விவசாயத் துறையில் துணை புரியும் "நிபுணர்களாக"வும் பணியாற்றி வருகின்றனர்.

தென் வியத்நாமிலும் லாவோசிலும் உள்ள ஐ.வி.எஸ். நபர்களுக்கு அடிக்கடி பிரத்தியேகப் பணிகளும் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் லாவோஸ், கம்போடியா, தென்வியத்நாம் ஆகிய நாடுகளிலுள்ள தேசபக்தர்களுக்கு எதிரான துண்டுப் பிரசுரங்களை கிராமங்களில் வினியோகிக்கின்றனர். மத்திய அலுவலகத்தில் இருந்து இவர்களுக்கு வானொலி மூலம் உத்தரவுகளும் வந்து சேர்கின்றன. கிராமங்களில் நிலவும் நிலைமை பற்றிய விவரங்களை அவர்கள் ரகசிய பாஷையின் மூலம் சைகோனுக்கும் வியன்டியனுக்கும் அனுப்புகின்றனர். இந்த விவரங்களைத் தெரிந்து கொண்ட பின், கொரில்லாப் படையினர் எங்கே மிகவும் வலுவாக உள்ளனர் என்று கருதப்படுகிறதோ, அங்கு அமெரிக்க விமானங்கள் பறந்து சென்று தாக்குகின்றன. குண்டுகளைப் பொழிகின்றன.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில்(13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர். கே. முத்தையா

## கொள்ளையோ கொள்ளை!

# பிராடு மன்னன் பிர்லாவின்வரிஏய்ப்பு

காங்கிரஸ் கட்சியின் உதவியுடன்-என்னென்ன குல்மால் செய்ய முடியுமோ—அத்தனையும் செய்து கொள்ளையடிப்பதில் அசகாயசூரன் கொள்ளை ஏகபோக முதலாளி பிர்லா. பிராடு நம்பர் ஒன்றாக இருக்கும் பணத்திமிங்கலம் பிர்லா இந்தியாவின் இரண்டாவது பெரிய பணக்காரர். லட்ச ரூபாய், 10 லட்ச ரூபாய் பணக்காரனல்ல பிர்லா. ஒரு கோடி...பத்துகோடி சொத்துள்ளவரல்ல பிர்லா.

பிர்லா சமர்ப்பித்த வெள்ளைக் கணக்கின்படியே அவரின் சொத்து மதிப்பு இன்று ரூ 659 கோடி கோடிக் கணக்கில் மூலதனம் போட்டு நடக்கும் பல பிருமாண்டமான தொழிற்சாலைக்குச் சொந்தக்காரரான பிர்லா கட்டும் சொத்து வரி எவ்வளவு தெரியுமா? சொன்னால் நம்பமாட்டீர்கள். **வெறும் ரூ. 8 தான்.** ஆம்! எட்டேரூபாய்தான். நாடாளுமன்றத்தில்சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை ஒன்று இந்த இமாலய பிராடு வேலையை அம்பலப்படுத்தியது.

அத்துடன் நின்றுவிடவில்லை. பிர்லாவின் எத்து வேலை... ஏமாற்று வேலை.

பல குல்மால்கள் புரிந்து காங்கிரசின் பெரிய மந்திரிகள் முதல்... கடைசியாக அலுவலக பியூன் வரை இடைப்பட்ட எல்லா இடத்திலும் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து... பிடிக்கவேண்டியவர்களைப் பிடித்து வரியே இல்லாமல் ஆக்கிவிடுவார் பிராடுமன்னன் பிர்லா.

அப்படியே முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைக்கமுடியாமல் ஏதோ பெயருக்கு கொஞ்சம் வரி போட்டால் அதையும் கட்டாமல் லட்சம் லட்சமாக பாக்கி வைத்திருக்கின்றன பிர்லா கம்பெனிகள்.

இதுபற்றி நாடாளுமன்றத்தில் நடந்த விவாதத்தில் பிர்லாக் கம்பெனிகள் 1972-ம் ஆண்டு மார்ச் மாதம் முடிய செலுத்தவேண்டிய வரி பாக்கிகள் பற்றிய விவரம் சமர்ப்பிக்கபட்டுள்ளது. அந்த நீண்ட பட்டியலில் சிலவற்றை இங்கு தருகிறோம்.

| | | |
|---|---|---|
| 1) | ஆசியன் டிஸ்டிரிபியூட்டர்ஸ் லிமிடெட் | ரூ 21,150 |
| 2) | பாலி சணல் கம்பெனி லிமிடெட் | ரூ 1,64,000 |
| 3) | பாரத் காமர்ஸ் அண்ட் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட் | ரூ 9,36,000 |
| 4) | பிர்லா பிரதர்ஸ் (பி)லிமிடெட் | ரூ 6,67,000 |
| 5) | சென்ட்ரல் இந்தியா இன்டஸ்ட்ரீஸ்லிமிடெட் | ரூ 23,52,000 |
| 6) | குவாலியர் ரேயான் அண்ட் சில்க் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட் | ரூ 32,26,781 |
| 7) | இந்துஸ்தான் கேஸ் அன்ட் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட் | ரூ 7,27,000 |
| 8) | ஹிந்த் சைக்கிள்ஸ் லிமிடெட் | ரூ. 41,934 |
| 9) | இன்டியன்ஸ் மெல்டிங் அண்ட் ரிபைனிங் கம்பெனி லிமிடெட் | ரூ. 1,72,196 |
| 10) | இன்டியன் டூல் மேனுபாக்சரிங் லிமிடெட் | ரூ. 10,81,349 |
| 11) | கோர்ஸ் (இன்டியா) லிமிடெட் | ரூ. 12,80,061 |
| 12) | நேஷனல் இன்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் | ரூ. 20,90,000 |
| 13) | அலகாபாத் நியூ சுதேசி மில்ஸ் லிமிடெட் | ரூ. 5,30,000 |
| 14) | நியூ சுதேசி சுகர்ஸ் லிமிடெட் | ரூ. 4,56,671 |
| 15) | பத்மாவதி ராஜி காட்டன் மில்ஸ் லிமிடெட் | ரூ. 3,16,000 |
| 16) | பிலானி இன்வெஸ்ட்மென்ட் கார்ப்பரேஷன் லிமிடெட் | ரூ. 25,66,000 |
| 17) | டெக்ஸ்டைல் மிஷினரி கார்ப்பரேஷன் லிமிடெட் | ரூ, 13,08,000 |
| 18) | சூரா சணல் மில்ஸ் | ரூ. 1,24,000 |
| 19) | மேற்கு பஞ்சாப் பாக்டரிஸ் லிமிடெட் | ரூ, 2,99492 |
| 20) | சால்ட் அண்ட் எஃகு இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் | ரூ, 1,38,854 |
| 21) | மினரல்ஸ் அண்ட் மினரல்ஸ் லிமிடெட் | ரூ. 1,45,000 |
| 22) | செட்ரல் இண்டியா மெஷினரி மேனுபாக்சரிங் கம்பெனி லிமிடெட் | ரூ. 4,98,642 |

நாட்டுமக்களை கொள்ளையடித்து அவர்களை மொட்டையடித்துவரும் இந்த ஏகபோக முதலாளி பிர்லா போன்றவர்கள் கோடி கோடியாக வரி பாக்கி வைத்திருக்க அனுமதிக்கும் இந்த அரசாங்கம்— அன்றாடம் காய்ச்சி ஏழைகள் ரூ 50; ரூ 100 என்று வரிபாக்கி வைத்திருந்தால்... விவசாயத்திற்கு வாங்கிய கடனை கடும் பஞ்சத்தால் கட்ட முடியாமல் போனால்... ஆட்டைப் பிடி... மாட்டைப்பிடி... வீட்டு ஜன்னல், நிலைப்படி ஒன்றும் இல்லாமல் அனைத்தையும் ஜப்தி செய்என்று தாசில்தார்களும், கலெக்டர்களும், போலீஸ் அதிகாரிகளும் சர்... புர்... என்று லாரிகளிலும் ஜீப்புகளிலும் வரிந்து கட்டிக்கொண்டு வருபவர்கள் கொள்ளை முதலாளி பிர்லாவிடம் போவார்களா?